Regd. No. M. 5934 Phone: No. 2241

# ஜனசக்தி

ஆசிரியர்: ப. ஜீவானந்தம் JANASAKTHI

(வெளியூர் பதிப்பு)

மலர் 15 இதழ் 46 ] சென்னை 1-10-58 விளம்பிவ்ரு புரட்டாசிமீ 15வ புதன்கிழமை [ 4 பக்கங்கள் 7 காசுகள்

### சோவியத் நாட்டின் மகத்தான முன்னேற்றம்

பம்பாய், செப். 29—

கடந்த ஐந்தாண்டுகளில் சோவியத் நாட்டில் பலதுறைகளிலும் மகத்தான முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது என்று சோவியத் நாடு சென்று தாயகம் திரும்பியுள்ள ராஜகுமாரி அமிருத கௌரி கூறினார். சோவியத்நாடு, போலந்து, ஹங்கேரி, ருமேனியா, யுகோஸ்லேவியா முதலிய நாடுகளுக்கு செஞ்சிலுவை இயக்க சார்பில் அவர் விஜயம் செய்திருந்தார்.

### வேலையற்றோர் பற்றிக் கணக்கு எடுக்கப்படும்

புதுடில்லி, செப். 29—

1961-ல் ஏற்பாடு செய்யப்பட்டுள்ள ஜனத்தொகைக் கணக்கெடுப்பின்போது நாட்டில் உள்ள வேலையற்றோர் பற்றிய கணக்கும் எடுக்கப்படும் என்று தெரிகிறது. இது தவிர ஒவ்வொரு குடும்பமும் விவசாயம் தொழில் இவற்றில் எதில் ஈடுபட்டுள்ளது என்பதுபற்றிய விபரமும் திரட்டப்படும்.

# மத்திய சர்க்காரின் யோசனையின்படி

## காளீஸ்வரா மில்லை ஏற்று நடத்து

### சென்னை சர்க்காருக்கு வேண்டுகோள்

கோவை, செப். 29— காளீஸ்வரா மில் விஷயமாக கோவை ஜில்லா மில் தொழிலாளர் சங்கத்தின் சார்பில் பின்வரும் அறிக்கை வெளியிடப்பட்டுள்ளது.

நிர்வாக தகராறால் மூடப்பட்ட காளீஸ்வரா மில்லை சர்க்கார் எடுத்து நடத்த கோரி சென்ற 15ம் தேதிமுதல் கோவை ஜில்லா மில் தொழிலாளர் சங்கம் ஆரம்பித்துள்ள சத்தியாக்கிரக போராட்டத்தில் 110 பெண்கள் (19 பேர் கை குழந்தைகளுடன்) 287 ஆண்கள் உட்பட 397 பேர்கள் கைது செய்யப்பட்டுள்ளார்கள். சங்க தலைவர் திரு. என். கே. பழனிசாமி அவர்களும் சிறை சென்றுள்ளார்.

காளீஸ்வரா மில் சம்பந்தமாக எல்லா விஷயங்களையும் அகில இந்திய தொழிற்சங்க காங்கிரஸ் உதவிதலைவர் தோழர் பார்வதி கிருஷ்ணன் அவர்கள் மத்திய சர்க்கார் வர்த்தக தொழில் அமைச்சர் அவர்களை பேட்டி கண்டு பேசி புள்ளிவிவரங்களுடன் மகஜர் ஒன்றும் கொடுத்துள்ளார்கள்.

**ஆலோசனை**

சென்னை ஹைகோர்ட்டின் உத்தரவைப் பெற்று காளீஸ்வரா மில்லை லீசில் எடுத்து நடத்தும்படி மத்திய சர்க்கார் மாகாண சர்க்காருக்கு ஆலோசனை கூறி கடிதம் ஒன்று எழுதியுள்ளதாக தெரிகிறது. மில்லை நடத்துவதற்கான பொருளாதாரம் பற்றியும் மேற்படி கடிதத்தில் குறிப்பிட்டுள்ளார்கள். அதாவது ஏற்கனவே மேற்படி மில் நிர்வாகம், மில் மிஷின்கள் புனருத்தாரணத்துக்காக தேசிய தொழில் விஸ்தரிப்பு கார்ப்பரேஷனிடம் கடன் கேட்டிருப்பதாகவும், மேற்படி கடன் கொடுக்கும்படி ஜவுளி தொழில் கடன் சிபாரிசு கமிட்டி சிபாரிசு செய்துள்ளதாகவும் தெரிகிறது. எனவே மேற்கொண்டு மில் நிர்வாகத்தை எடுத்து நடத்தவேண்டிய முழுப் பொறுப்பும் மாகாண சர்க்காரையே சேரும்.

மேற்படி விஷயங்களை விளக்கி மத்தியசர்க்கார் தொழில் வர்த்தக அமைச்சர் திரு. லால்பஹதூர் சாஸ்திரி அவர்கள் தோழர் பார்வதிகிருஷ்ணன் அவர்களுக்கு கடிதம் எழுதியுள்ளார்.

**திறந்து நடத்துக**

எனவே மேற்கொண்டு மாகாண சர்க்கார் பொறுப்பை தட்டிக்கழிக்காமல், ஹைகோர்ட்டுக்கு விண்ணப்பம் செய்து, தேசிய தொழில் விஸ்தரிப்பு கார்ப்பரேஷனிடம் கிடைக்கும் கடனையும் பெற்றுக்கொண்டு மில்லை திறந்து நடத்தமுன்வரவேண்டும். சுமார் 2600 தொழிலாளிகளையும் அவர்களுடைய குடும்பங்களையும் பாதித்துள்ள இந்த பிரச்சினையில் மாகாண சர்க்கார் உடனே தலையிட்டு பிரச்னையை சமுகமாக தீர்க்கப் போராடும் காளீஸ்வரா மில் தொழிலாளிகளுக்கு பொது மக்கள் எல்லாவித உதவிகளும் செய்யவேண்டுமாய்க் கேட்டுக் கொள்ளுகிறோம்.

## பர்மா இடைக்கால சர்க்கார் தேர்வு

### ஆட்சேபித்து ரங்கூனில் ஆர்ப்பாட்டம்

#### இந்தியர் பத்திரமாக இருக்கின்றனர்

ரங்கூன், செப். 29— தேசிய ஐக்கிய முன்னணியின் ஆதரவாளர்கள் இன்று ரங்கூன் நகரில் ஆர்ப்பாட்டங்கள் நடத்தினர். ராணுவத்தினிடம் சர்க்காரை ஒப்படைப்பதற்கு ஆட்சேபம் தெரிவித்தனர். ஆனால் அசம்பாவிதமான சம்பவங்கள் எதுவும் நிகழவில்லை.

பாதுகாப்பு ஏற்பாடுகள் நீடித்து வருகின்றன.

**இந்தியர் நிலை**

ரங்கூனிலும் இதர ஜில்லாக்களிலுமுள்ள இந்தியர் பத்திரமாகவே இருக்கின்றனர்.

**இடைக்கால சர்க்கார் அமைப்பு விஷயம்**

பர்மாவின் பிரதம தளபதி நீவின் அமைக்கப்போகிற இடைக்கால சர்க்காரில் 10 முதல் 15 மந்திரிகள் இருப்பரென்று இன்று ராணுவ வட்டாரங்கள் கூறின.

இன்றுள்ள சர்க்காரில் 27 மந்திரிகள் உண்டு.

இடைக்கால சர்க்காரில் சில ராணுவ அதிகாரிகளும் நியமிக்கப்படுவரென்று அறியப்படுகிறது.

பர்மா பார்லிமெண்டு அக்டோபர் 28-ந் தேதி கூடி ஜெனரல் நீவின்னை இடைக்கால சர்க்காரின் பிரதமராகத் தேர்ந்தெடுக்கப் போகிறது. தேசிய ஐக்கிய முன்னணியின் 40 உறுப்பினர்கள் எதிராக ஓட்டுப்போடுவார்கள்.

ஆளும் கட்சிக்குள் எதிர்க் கட்சித் தலைவர்களான ஊ பா ஸ்வீ, ஊ பா க்யா என்பவர்கள் ஜெனரல் நீவின்னை ஆதரிப்பதாக உறுதிமொழி கொடுத்திருக்கிறார்கள். ஊபா முன் கூட்டியே ஊ பா ஸ்வீ, ஊ பாக்யா இருவரிடமும் உறுதிமொழி பெற்றுக் கொண்டாரென்று அறியப்படுகிறது.

இப்பொழுது மக்களின் கவனம் அக்டோபர் 28-ந்தேதி ஆரம்பமாகிற பார்லிமெண்டின் கூட்டத்தின் மீது சென்றிருக்கிறது. சகஜ நிலைமை ஏற்பட்டுவிட்டதாகவும் கூறப்படுகிறது.

### பஞ்சாயத்து மசோதா நிறைவேறியது

#### வரி வசூலிப்பது பற்றிய அரசாங்கத்தின் கொள்கை

**சட்ட சபை விவாத விபரம்**

சென்னை, செப். 29— கிராம வருமான துறையிலுள்ள அதிகாரிகளையும் ஊழியர்களையும் வரி வசூலிக்கப் பயன்படுத்தும் அதிகாரத்தை அரசாங்கம் எடுத்துக்கொள்ளும் முறையில் திருத்தங்களைக்கொண்ட பஞ்சாயத்து மசோதா இன்று சென்னை சட்டசபையில் நிறைவேறியது.

இன்றைய விவாதங்களில் எஸ். எம். அண்ணாமலை (தி. மு. க.) மாதராசவுடர் (காங்) வி. கே. கோதண்டராமன் (கம்யூ) என். கே. பழனிச்சாமி (கம்யூ) கே. சட்டநாத கரையாளர் ஆகியோர் கலந்து கொண்டனர்.

அரசாங்கத்தின் சார்பாகக் கொடுக்கப்பட்ட திருத்தங்கள் தவிர எதிர்க்கட்சியினர் அளித்த எந்தத் திருத்தமும் அரசாங்கத்தால் ஏற்றுக்கொள்ளப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

### அமெரிக்க சுப்ரீம் கோர்ட்டு தீர்ப்பு

#### நிராகரிக்க புதுத் தந்திரம்

லிட்டில் ராக், செப். 29— இங்குள்ள நான்கு செகண்டரி பாடசாலைகளில் வெள்ளை மாணவரும் நீக்ரோ மாணவரும் சேர்ந்து படிக்க உடனடியாக ஏற்பாடு செய்ய வேண்டுமென்று சுப்ரீம் கோர்ட்டு உத்தரவிட்டிருந்தும், அப்பாடசாலைகளின் நிர்வாகிகள் இன்று ஒரு பிரத்தியேக ஸ்தாபனத்திடம் அப்பாடசாலைகளை ஒப்படைக்க முடிவு செய்துவிட்டார்கள்.

அந்தப் பிரத்தியேக ஸ்தாபனம் நீக்ரோ மாணவரையும் வெள்ளை மாணவரையும் பிரித்து வைத்தே பாடசாலைகளை நடத்தத் திட்டமிட்டிருக்கிறது.

### பிரெஞ்சு மந்திரிசபை கூடுகிறது

#### பொதுத் தேர்தல் பற்றி ஆலோசனையாம்

பாரிஸ், செப். 29— புதிய அரசியல் திட்டம் பற்றி சர்வஜன வாக்கெடுப்பு நாடகம் முடிந்து விட்டதால் அடுத்தபடி நவம்பரில் நடக்கப் போகிற பொதுத் தேர்தல்களில் எவ்வித ஓட்டு முறையை அமல் நடத்துவது பற்றி ஆலோசிக்க நாளைக்கு பிரெஞ்சு மந்திரிசபை கூடுகிறது. அக் கூட்டத்தில் தலைமை வகிக்க ஜெனரல் டிகால் தமது ஊரிலிருந்து இன்று பாரிஸுக்கு வந்தார்.

ஆதிக்கக்காரர்களின் அநீதி

சங்கர்ஸ் வீக்லி கார்ட்டூனைத் தழுவியது.

## குழந்தைகளின் உணவு விலை ஏற்றத்தைத் தடுக்க எடுத்த நடவடிக்கைகள் யாவை?

### கடைநிலை ஊழியர்கள், மீன் எண்ணை தொழிற்சாலை

#### சட்டசபையில் கேள்வி நேரம்

சென்னை, செப். 30— ஒன்பதரை லட்ச ரூபாய்கள் செலவில் சென்னை மரீனா கடற்கரையில் கடற்பொருள்களின் பண்ணை (மரீன் அக்வேரியம்) யொன்று நிறுவ அரசாங்கம் உத்தேசித்திருக்கிறதென்றும் ஆனால் இத்திட்டம் இன்னும் அங்கீகரிக்கப்படவில்லை என்றும் எம். ஜகனுதனின் கேள்வியொன்றுக்குப் பதிலளிக்கையில் ஸ்தல ஸ்தாபனத்துறை அமைச்சர் லூர்தம்மாள் சைமன் கூறினார்.

**கடைநிலை ஊழியர்கள்**

கடைநிலை ஊழியர்கள் சங்கம் (சென்னைக் கிளை) கடந்த ஆண்டு நவம்பரில் தங்கள் குறைகளை விளக்கி அரசாங்கத்திடம் முறையிட்டனர் என்றும் அந்த முறையீடு கவனிக்கப்பட்டதாகவும் குறைகளைப் போக்க நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருவதாகவும் கேள்வி யொன்றுக்குப் பதிலளிக்கப்பட்டது.

**அனாதைப் பெண்களுக்கு உதவி**

ஆயிரத்துக்கு மேற்பட்ட அனாதைப் பெண்கள் அரசாங்கம் அமைத்திருக்கும் விடுதிகளில் பாதுகாக்கப்படுகின்றனர் என்றும் அவர்களில் சிலருக்கு அரசாங்கம் தனது செலவிலேயே திருமண ஏற்பாடுகளையும் செய்து வருவதாகவும் பி. ஜி. மாணிக்கத்தின் கேள்வி யொன்றுக்குப் பதிலளிக்கப்பட்டது.

முப்பது வயதுக்கு மேற்பட்ட பிரமசாரிகள் இப்படிப்பட்ட அனாதைப் பெண்களைத்தான் திருமணம் செய்துகொள்ள வேண்டுமென்று அரசாங்கம் உத்தரவு போடுமா என்று உறுப்பினர் ஒருவர் கேட்கவே சபையில் பெரும் சிரிப்பொலி எழுந்தது. முதலமைச்சர் காமராஜர் இந்தக் கேள்வியைக் கேட்டு மிகவும் மகிழ்ச்சியடைந்தார். இதற்கு, திருமணம் கட்டாயப்படுத்தப்பட்ட உறவு அல்ல என்றும் ஒருவர், இன்னாரைத்தான் திருமணம் செய்து கொள்ள வேண்டுமென்று வற்புறுத்த முடியாதென்றும் அமைச்சர் பதிலளித்தார்.

**குழந்தைகள் உணவு**

உதகமண்டலத்தில் குழந்தைகள் உணவு தயாரிப்பு நிலயம் ஒன்றைத் தொடங்க உத்தேசம் இருப்பதாகவும் இதுபற்றிச் சில வெளிநாட்டுக் கம்பெனிகள்கூட முயற்சித்து வருவதாகவும் ஏ. ஏ. ரஷீத், எம். கருணாநிதி ஆகியோரின் கேள்விக்குப் பதிலளிக்கப்பட்டது. மத்திய அரசாங்கத்துக்கு இந்தக் குழந்தைகள் உணவு பற்றிய விலைக் கட்டுப்பாடு பற்றி சென்னை அரசாங்கம் சிபாரிசுகள் ஏதும் செய்யவில்லை என்றும் ஆனால் மொத்த வியாபாரிகளுடன் சில முக்கிய உடன்பாட்டுக்கு வந்திருப்பதாகவும் இப்பொழுது விலைகள் குறிப்பிடத்தக்க அளவில் குறைந்திருப்பதாகவும் துணைக் கேள்விகளுக்குப் பதிலளிக்கப்பட்டது.

**மீன் எண்ணெய்த் தொழிற்சாலை**

மீன் எண்ணெய்த் தொழிற்சாலையொன்று நமது ராஜ்யத்தில் நிறுவ முயற்சிக்கப்படுவதாகவும் ஆனால் இதற்குக் குறைந்தது 30 டன் எண்ணெய் கிடைக்க வேண்டுமென்றும் இப்பொழுது 10 டன் எண்ணெய்தான் கிடைக்கிறதெனவும் கோழிக்கோட்டில் இருக்கும் எண்ணெய்த் தொழிற்சாலை கேரளத்துக்குச் சொந்தமாய் விட்டதால் நமது தேவையைப் பூர்த்தி செய்ய எல்லா நடவடிக்கைகளும் எடுக்கப்பட்டு வருவதாகவும் ஸ்தல ஸ்தாபனத்துறை அமைச்சர் கேள்வியொன்றுக்குப் பதிலளித்தார்.

### சைப்ரஸ் சுதந்திரத்திற்கு மக்காரியோஸ் திட்டம்

#### கிரேக்க பிரதமர் பூரண ஆதரவு

ஏதன்ஸ், செப். 29— சைப்ரஸ் சுதந்திரமடைவதற்கு ஆர்ச்பிஷப் மக்காரியோஸ் முன் வைத்துள்ள திட்டத்திற்கு கிரேக் பிரதம மந்திரி கான்ஸ்டான்டின் கரமான்லிஸ் இன்று பூரண ஆதரவு தெரிவித்தார். சைப்ரஸை கிரீஸோடு சேர்க்கும்படி கிரேக்க சர்க்கார் என்றுமே கோரியதில்லை என்றும் கிரீஸ் விரும்புவதெல்லாம் சைப்ரஸ் மக்கள் தங்கள் ஆட்சியைத் தாங்களே வகுத்துக் கொள்ள சுதந்திரம் அளிக்கப்பட வேண்டும் என்பதுதான் என்றும் அவர் கூறினார். (ராய்ட்டர்)

## அனைவரும் காங்கிரசோடு சேர்ந்துவிடலாம்

### இந்தியாவுக்குக் கட்சிகள் வேண்டாம்

#### ஜெயப்பிரகாஷ் நாராயணனின் புது ஜனநாயகம்

பம்பாய், செப். 29— "தேச முன்னேற்ற விஷயத்தில் பொது மக்களிடையே ஆர்வத்தையும் உற்சாகத்தையும் ஏற்படுத்துவதற்காக ஒரு குறைந்த பட்ச திட்ட அடிப்படையில் எல்லா 'ஜனநாயகக் கட்சிகளையும் ஒன்று சேர்க்க வேண்டும். இதற்கான முன் முயற்சியை பிரதமர் நேருவே மேற்கொள்ள வேண்டும்."

இவ்விதம் இங்கு பத்திரிகையாளர் சங்கக் கூட்டத்தில் பேசுகையில் ஜெயப்பிரகாஷ் நாராயணன் குறிப்பிட்டார். அவர் மேலும் பேசுகையில் ஜனநாயகத்திலும் சோஷலிஸத்திலும் காங்கிரஸ், பி. சோ., சோஷலிஸ்ட் இன்னும் இதர ஜனநாயகக் கட்சிகளுக்கு உண்மையிலேயே நம்பிக்கையிருக்குமானால் அவைகள் எல்லாம் ஒன்றுபடவேண்டும். இவ்வகையில் பெரிய அண்ணனான காங்கிரசும் அதன் தலைவர் நேருவும் முன் முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டும் என்றார்.

இத்தகைய ஒரு குறைந்தபட்சத் திட்டம் ஏற்றுக்கொள்ளப்படுமானால் தற்போது கட்சிகளிடையே பரஸ்பரம் நிலவும் குரோதம் மறையும். ஒருவேளை இந்த முயற்சி பலிதமாகாமல் போய் விட்டாலும்கூட அதனால் எதுவும் இழந்துவிடப் போவதில்லை என்றார் ஜெயப்பிரகாஷ் நாராயணன்.

**நேரு, வினோபாவோடு கலப்பார்**

இந்தத் திட்டம் பற்றி பிரதமர் நேருவோடும் வினோபா பாவே யுடனும் கலந்தாலோசிக்கப் போவதாகவும் அவர் கூறினார். இத்தகைய ஒரு குறைந்த பட்சத் திட்டம் தயாரிப்பதில் ஜனாதிபதி பிரசாத்தும் கலந்து கொள்வதைத் தாம் விரும்புவதாகத் தெரிவித்தார்.

**கட்சிகள் வேண்டாம்**

ஜெயப் பிரகாஷ் தொடர்ந்து பேசுகையில், பஞ்சாயத்து போர்ட், ஜில்லா போர்ட், நகர சபை, கார்ப்பரேஷன் தேர்தல்கள் கட்சி அடிப்படையில் நடைபெறக் கூடாது. சட்டசபை, மக்கள் சபை தேர்தல்களிலும்கூட கட்சிகள் தங்கள் அபேட்சகர்களை நிறுத்தக் கூடாது. அதற்குப் பதில் அந்தத் தொகுதி மக்களே இரண்டு மூன்று அபேட்சகர்களை நிறுத்தலாம். அவர்களில் தங்களுக்குப் பிடித்தமானவர்களை கட்சிகள் ஆதரிக்கலாம் என்றார்.

இந்தியாவுக்கு கட்சி முறை பொருந்தாது. மேல்நாடுகளில் கட்சி முறை இருக்கிறதென்றால் அது இந்த அளவுக்கு வளர சில பல நூற்றாண்டுகள் ஆகியுள்ளன. அதிலும் அங்கேயும்கூட இரண்டு கட்சி அமைப்பு முறை உள்ள நாடுகளில்தான் கட்சி முறை நன்கு செயல்பட்டுள்ளது. மேல் நாடுகளில் உள்ளது போல இரு கட்சி அமைப்பு முறை ஏற்படுவதற்கான பக்குவத்தை இன்னும் இந்தியா அடையவில்லை என்று கூறி முடித்தார். (பி. டி. ஐ.)

### மேற்கு இரியன் மீது டச்சு ஆதிக்கம்

#### சட்ட விரோதமானதென்று ஐ. நா.வில் கண்டனம்

ஐக்கிய நாடுகள், செப். 29— இன்று ஐ. நா.வில் உலக விவகாரங்கள்பற்றி விவாதம் நீடித்தது.

இந்தோனேஷியாவின் பிரதிநிதி மேற்கு இரியன் பிரதேசம் மீது சட்டவிரோதமாக டச்சு ஆதிக்கம் நீடிப்பதற்கு ஆட்சேபம் தெரிவித்தார்.

கீழ்க்கோடி சம்பந்தமாக யதார்த்த நிலையை அனுசரித்து பரிகாரம் தேட முயற்சிக்கவேண்டும்; ஐ. நா.வில் மக்கள் சீனாவை அனுமதிக்கவேண்டும். அவ்விதம் செய்தால் கீழ்க்கோடி பிரச்சினைக்கு சமாதான முறையில்தீர்வு காண ஐ. நா.வுக்கு வாய்ப்பு உண்டென்றும் இந்தோனேஷியப் பிரதிநிதி கூறினார்.

## பார்மோசாவை விட்டு அமெரிக்கா வெளியேற வேண்டும்

### டெல்லியில் ஆர்ப்பாட்டம்

புதுடில்லி, செப். 29— பார்மோஸாவை விட்டு அமெரிக்கப் படைகள் உடனே வெளியேறவேண்டும் என்ற கோஷங்களுடன் அமெரிக்கத் தூதராலயத்தின் முன் ஒரு ஆர்ப்பாட்டம் நடைபெற்றது. இந்த ஆர்ப்பாட்டத்திற்கு சமாதான இயக்கத் தலைவர் பண்டிட் சுந்தர்லால் தலைமை தாங்கினார்.

சமாதானக் கமிட்டி சார்பில் இந்த ஆர்ப்பாட்டம் ஏற்பாடு செய்யப்பட்டது. ஆசியாவில் தலையிடாதே! ஆசியாவை விட்டு வெளியேறு! என்ற கோஷங்கள் முழுங்கப்பட்டன.

தூதராலய அதிகாரியிடம் ஒரு மகஜரும் கொடுக்கப்பட்டது. ஆர்ப்பாட்டத்தில் திரளான மக்கள் கலந்துகொண்டனர்.

## மக்கள் சீனமீது சியாங்கேஷேக் குண்டு வீசித் தாக்குவாராம்!

தெய்பே (பார்மோஸா), செப். 29— தூரக்கிழக்கு நெருக்கடி கோமிண்டாங் 'சீனா'வுக்கு "வாழ்வா, சாவா" என்ற பிரச்சினையாக மாறுமேயானால், அமெரிக்க உதவியுடனோ, அல்லது இல்லாமலோ சீனாவைத் தாக்குவேன், என்று சியாங்கே ஷேக் இன்று கொக்கரித்துள்ளார்.

சியாங்கே ஷேக், பார்மோசாவில் பத்திரிகை நிருபர்களிடம் பேசுகையில், "தூரக்கிழக்கு நெருக்கடியில் அமெரிக்க தரைப் படைகள் ஈடுபடும்படி ஏற்படுமோ என்று அமெரிக்காவில் ஒரு சந்தேகம் இருக்கிறது.

"பார்மோசா ஜலசந்தியில் யுத்தத்தில் கலந்துகொள்ள வேண்டுமென்று அமெரிக்கத் தரைப்படைகளை நான் வேண்டவில்லை" என்று கூறினார்.

"வார்சாவில் சீன-அமெரிக்க ஸ்தானிகர்களிடையே பேச்சு வார்த்தை நடப்பதைப்போல், கம்யூனிஸ்டுகளுடன் எத்தகைய பேச்சுகளினாலும் ஒருவிதப் பயனும் இல்லை. பார்மோசா ஜலசந்தி விஷயத்தை ஐ. நா. சபையில் விவாதிக்க வேண்டுமா என்பது பற்றி கோமிண்டாங் சர்க்கார் பரிசீலித்து வருகிறது. தற்பொழுது ஐ. நா.வில் அதுபற்றி விவாதிக்க அவசியமில்லை என்று தான் கருதுகிறோம்" என்றார்.

"குமாய், மட்சு கரையோரத் தீவுகள் விஷயமாக அவருடைய சர்க்கார் எந்த சலுகையையும் கொடுக்காது; அந்தத் தீவுகளில் எங்களுடைய அந்தஸ்தை நிலைநிறுத்திக்கொள்ள எங்களுக்கு சக்தி யிருக்கிறதா என்ற பிரச்சனைக்கே இடமில்லை" என்றும் கூறினார்.

"சில சூழ்நிலைமைகளின் கீழ் கோமிண்டாங் சர்க்கார் சீனாமீது குண்டு வீசித் தாக்கும்; ஆனால் அத்தருணம், இன்னும் வரவில்லை" என்றும் சியாங்கேஷேக் கூறினார்.

### கோமிண்டாங் ஏஜண்டுகள் தூக்கிலிடப்பட்டனர்

ஹாங்காங் செப் 28— மக்கள் சீனக் குடியரசில் சீர்குலைவு வேலைகள் செய்துவந்ததாக ஹாங்காங்கிலிருந்து சியாங்கே ஷேக்கின் உளவு கோஷ்டியால் அனுப்பிவைக்கப்பெற்ற 11 பேர் தூக்கிலிடப்பட்டனர். மாஸ்கோவில் குழப்பம் விளைவிக்க இவர்கள் அமெரிக்க ஆயுதங்களுடன் முயற்சி செய்தனர். வேறு இருவருக்கு 20 ஆண்டு சிறைத் தண்டனை அளிக்கப்பட்டது. ஒருவர் மடமையின் காரணத்தால் இதில் கலந்துகொண்டார் என்று மன்னிப்பளிக்கப்பட்டது.

## அமருக்கு அறைகூவும் அமெரிக்கக் கொள்கை

### படுதோல்வி யடைவது திண்ணம்

#### ஐ. நா.வில் கண்டனம்

ஐ. நா. நியூயார்க், செப். 29— மத்திய கிழக்குப் பிரச்சினை விஷயமாக ஐ. நா. பொதுச் சபை நிறைவேற்றிய தீர்மானத்தை பிரிட்டனும் அமெரிக்காவும் நிறைவேற்றவில்லை என்று இங்கு நடைபெற்ற ஐ. நா. பொதுச் சபைக் கூட்டத்தில் அல்பேனியப் பிரதிநிதி பெஹார் ஸ்டியில்லா கூறினார்.

அவர்களது படைகள் எப்போது வாபஸாகும் என்பதை அறிய ஐ. நா.வுக்கு உரிமையுண்டு என்றார். படைகளை அப்படியே வைத்திருக்க இந்த இரு நாடுகளும் ஏதாவது சாக்குப் போக்குகளைக் கூறி வருகின்றன என்றார்.

ஐ. நா. வில் மக்கள் சீனக் குடியரசுக்கு ஸ்தானமில்லாதிருப்பது அசாதாரணம், அபத்தமும் கூட. சியாங்கின் பின் மறைந்து கொண்டு அமெரிக்கா பல ஆத்திரமூட்டல் வேலைகளைச் செய்து வருகிறது. இந்த அச்சுறுத்தல்களுக்கெல்லாம் சீனா பயப்படாது. தனது தாயக முழுவதையும் விடுதலை செய்து ஐக்கியப் படுத்தியே தீரும் என்றார்.

ஐ. நா.வின் அடிப்படையான கடமை இன்று எதிர்கால சந்ததிகளை யுத்த அபாயத்திலிருந்து பாதுகாப்பதே என்று லாரஸ் பிரதிநிதி கெம்பான் பான்யா கூறினார். இந்த ஆண்டு நம்பிக்கையளிக்கும் ஆண்டாக இராமல் குழப்பம் விளைவிக்கும் ஆண்டாக இருக்கிறது என்றார்.

ஐ. நா. இனிமேலும் நகர முடியாத நிலைக்கு நிலைத்து நிற்கச் செய்யும் போக்கில் அமெரிக்காவின் வெளிவிவகாரக் கொள்கை யுத்தத்தின் நிழலாட்டத்தைக் கொண்டுவந்து விட்டது என்று ஹங்கேரியப் பிரதிநிதி டாக்டர் எண்ட்ரி சிக் கூறினார்.

அமெரிக்காவின் கொள்கையே சண்டைக்கு அறைகூவுவதாக இருக்கிறது. இதை அமெரிக்கா கைவிட வேண்டும். ஏற்கனவே இதற்குத் தோல்வி முகம் ஏற்பட்டுவிட்டது. இது படுதோல்வியுறுவது நிச்சயம் என்றார்.

காளேஸ்வரா மில் போராட்டம்

### நேற்று 22 பேர் கைது

#### 9 பேர் பெண்கள்

கோயமுத்தூர், செப். 29— காளேஸ்வரா மில்லை சர்க்காரே எடுத்து நடத்த வேண்டும் என்று கோரி இன்றும் கலெக்டர் அலுவலகத்தின் முன்பு தொடர்ந்து சத்தியாக்கிரகம் நடைபெற்றது. இன்றைய சத்தியாக்கிரகத்தில் 9 பெண்கள் உள்பட 22 பேர் கைது செய்யப்பட்டனர். இதுவரை இந்தப் போராட்டம் சம்பந்தமாக 110 பெண்கள் உள்பட மொத்தம் 397 பேர் கைதாகி உள்ளனர். (பி. டி. ஐ.)

### வெள்ளிங்கிரியின் உண்ணாவிரதம்

#### 2-வது நாள் ஆதரவு ஊர்வலம் பொதுக்கூட்டம்

மேட்டுப்பாளையம், செப். 29— பாக்குத் தோட்டத் தொழிலாளர் கோரிக்கைக்காக உண்ணாவிரதமிருக்கும் வெள்ளிங்கிரியின் அறப்போரை ஆதரித்து தொழிற்சங்கங்களின் சார்பில் மாபெரும் ஊர்வலமும் பொதுக்கூட்டமும் நடைபெற்றன.

இரண்டு நாட்களில் 500 மாலைகள் அவருக்கு அணிவிக்கப்பட்டதாயும், உண்டியலில் ரூ. 314-5-3 போராட்ட நிதி வசூலானதாயும் தெரிகிறது. பேச்சு வார்த்தைகள் நடந்து வந்தாலும் முடிவுகள் தெரியவில்லை. ந. நி.

## புதுக்கோட்டை சப்-கலெக்டர் ஆபீஸ் முன் சத்தியாக்கிரகம்

### பல தொழிலாளர்கள் கைது

திருச்சி, செப். 29— மகாகணபதி மில் சட்டவிரோதமாக மூடப்பட்டிருப்பதை எதிர்த்து சென்னை சர்க்கார்மூடப்பட்ட மில்லை திறந்து வேலை கொடுக்கவேண்டுமென்றும் சட்டவிரோதமாக மூடப்பட்ட மில் முதலாளியை கைதுசெய்ய வேண்டுமென்ற கோஷங்களுடனும் ஊர்வலமாக 26-9-58 தேதி முதல் சப் கலெக்டர் ஆபீஸ் முன் தொழிலாளர்கள் சத்தியாக்கிரகம் செய்தார்கள். அறு சர்க்கார் விடுமுறையாதலால் யாரையும் போலீஸார் கைது செய்யவில்லை. மீண்டும் 27-9-58ம் தேதியில் 3 பெண்கள் உட்பட 10 பேர்கள் மறியல் செய்த தொழிலாளர்களை போலீசார் கைதுசெய்து மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் தலா ஒரு வார சிறை தண்டனை விதிக்கப்பட்டது

மீண்டும் 29-9-58-ம் தேதியில் மேற்படி மில்லில் வேலைசெய்யும் தொழிலாளர்கள் நகர் ஊர்வலங்கள் கோஷத்துடன் வந்து கலெக்டர் ஆபீஸ் முன் கோஷம் போட்டுக் கொண்டு இருந்தார்கள். உடனே போலீசார் சத்தியாக்கிரகம் செய்த 5 பேர்களை (பெண்கள் 2, ஆண்கள் 3) கைது செய்தார்கள். ஒரு மணிநேரம் கழித்து மீண்டும் சுமார் 115 பேர்கள் ஊர்வலம்வந்து கலெக்டர் ஆபீஸ்முன் 5 பேர்கள் சத்தியாக்கிரகம்செய்ய மற்ற 110 பேர்கள் பக்கத்தில் நின்று கோஷம் போட்டார்கள். போலீஸார் உடனே சத்தியாக்கிரகிகளையும் பக்கத்தில் நின்று கோஷம் போட்டவர்களையும் 25 பெண்கள் உட்பட 111 தொழிலாளர்களை போலீஸார் கைது செய்தார்கள் இன்னும் தண்டனை அளிக்கவில்லை. மேலும் 30 தேதி முதல் தொடர்ந்து சத்தியாக்கிரகம் கலெக்டர் ஆபீஸ் முன் நடக்கும் என்று தெரிகிறது. (ந நி.)

# ஜனசக்தி

சென்னை 1-10-1958


## மகாத்மா! நீ வாழ்க! வாழ்க!

அக்டோபர் 2-ம் நாள் அண்ணல் காந்தியடிகளின் பிறந்த நாள். தேசத் தந்தையின் பிறந்த நாளை, ஒவ்வொரு ஆண்டும் தேசியப் பெருவிழாவாகக் கொண்டாடி வருகிறோம்.

இந்த அக்டோபர் 2-ம் நாள் அண்ணலின் 89-வது பிறந்த நாள் திருநாள்.

இந்தியப் பெருமக்களின் ஒப்பற்ற புதல்வரான காந்தியடிகள், 1920 லிருந்து 1948 ஜனவரி 30-ல் அவர் பூத உடல் நீத்தது வரையில், இந்திய விடுதலைப் போரில் நேர் நிகரற்ற தனிப்பெரும் தலைவர் அவரே. இந்தியப் பெருமக்களின் வாழ்க்கையில் காணக்கிடக்கும், சரித்திர முக்கியத்துவம்வாய்ந்த மைல் கற்கள் எல்லாம் அப்பெரியாரின் திருப் பெயரோடு பிரிக்க முடியாதபடி பின்னிப் பிணைந்தே கிடக்கின்றன.

தன்னேரிலாதநமது தேசத் தலைவரும், தத்துவ ஞானியுமான காந்தியடிகள், அகில உலகத்திற்கும் அறிமுகமான பெரியார். அவர், இருபதாம் நூற்றுண்டு கண்ட உலகு புகழ் மனிதத்துவ வாதிகளில் (humanists) எவரஸ்ட் சிகரம். வாழ் நாள் முழுவதையும் உன்னத லட்சியங்களுக்காக அர்ப்பணித்த உத்தமோத்தமர்.

இந்தியப் பெருமக்களின் சுதந்திர எண்ணங்களைப் பிரதிபலித்தார். இந்தியப் பொதுமக்கள், பிரிட்டிஷ் காலனி ஆட்சிக்கு எதிரிடையாக நடத்திய போராட்டத்தில், இந்திய மக்களை ஒன்று திரட்டும் பெரும் பணியில் தனி நாயகமாகத் திகழ்ந்தார்.

மகாத்மாவின் நீண்ட வாழ்நாள் வரலாற்றை ஒரு கணம் மேலோட்டமாக நினைத்தாலும் என்ன காண்கிறோம்? தென்னப்பிரிக்காவில் சென்ற நூற்றுண்டு முடிவடையும் தருவாயில் நிறவெறியை எதிர்த்து அவர் நடத்திய வீரதீரப் போராட்டமும், இந்தியாவுக்கு வந்ததும் பிரிட்டிஷ் ஏகாதிபத்யத்திற்கு விரோதமான இந்திய விடுதலைப் போராட்டத்தை உருவாக்குவதில் அவர் எடுத்துக் கொண்ட நடவடிக்கைகளும் நம் கண்முன் காட்சி அளிக்கின்றன.

காந்தியடிகள் ஒலிபெருக்கிய பேச்சு கோடானு கோடி இந்தியப் பெருமக்களின், இதய நரம்புகளை முடுக்கி, சுதந்திரக் கனலை மூட்டிவிட்டன. 1920-ல் இந்தியத் தேசியக் காங்கிரஸினுடையவும் அதன் இணையற்ற தலைவரான காந்தியடிகளினுடையவும் அழைப்புக்கு இணங்க இந்தியப் பெருமக்கள் பிரம்மாண்டமான சத்தியாக்கிரகப் போராட்டத்தில் குதித்தார்கள். 1930, 32-ல் அண்ணல் ஆணையிட்டார். பிரிட்டிஷ் ஆட்சியின் ஆணிவேர், பக்கவேர், சல்லி வேர் ஆட்டங்குந்த விதத்தில், இந்தியப் பெருமக்கள், நகரங்களில் மட்டுமல்ல, பட்டி தொட்டிகளிலும் பரவி நின்ற சட்ட மறுப்புப் போராட்டங்களில் ஈடுபட்டார்கள். அதே போன்று, 1942லும், "வெள்ளையனே வெளியேறு!" என்ற விடுதலைப் பெரும் முழக்கத்தைக் கிளப்பி, காந்தியடிகள் பரந்து விரிந்த இந்தியப் பெருமக்கள் திரளை இழுத்து இயக்கி, காலனிக் கொடுங்கோல், உயிர் கொடுத்தும் முறிக்க [illegible] அப்போர் வீரர்களுக்கு ஒளி காட்டி வழிகாட்டினர்.

உலகளாவக் கிடந்து உழன்ற நமக்குப் புத்துயிரும் புத்தொளியும் அருளி, நாம் மனிதர்களாக நிமிர்ந்து நிற்கச் செய்த வள்ளல் அவர். பொதுமக்களுடைய உணர்ச்சித் [illegible] நாடி பிடித்து அறிந்து கொள்ளும் பேராற்றலும், சூழ்நிலை [illegible] திறனும் அவரிடம் அமோகமாகப் பொதிந்து கிடந்தன.

சாதி, மதம், நிறம், இனம் என்ற பாகுபாடுகளைத் தாண்டி நின்று, எல்லா மக்களுடைய சமத்துவத்திற்காகவும் நேர்மையாகக் காலமெல்லாம் போராடிய புனிதர் அவர். ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாக இந்திய சமுதாயத்தின் முன்னேற்றத்திற்குச் சனியனு க-சாபத்தீடாக நின்று வந்திருக்கிற சாதீய முறையை கல்லி எறிய அவர் அரும்பாடுபட்டார். பிரிட்டிஷ் ஏகாதிபத்ய எதிர்ப்புப் போராட்டத்தில், இந்து-முஸ்லீம் ஒற்றுமைக்காக அவர் உருக்கு உறுதியோடு போராடி வந்தார்.

சமுதாய வாழ்வில் பெண்கள் ஆண்களோடு சரிநிகர் சமானமான வாழ்வுபெறப் போராடினர். இந்திய மக்களின், அதிசயமிக்க கலாச்சார பாரம்பரியத்தை பண்பாட்டை சர்வாம்ச ரீதியாக, முழுப் பார்வையோடு ஆராய்ச்சி செய்ய வேண்டும் என்று நம்மை அறிவுறுத்தினர். இந்தியமக்களின் மேதாவிலாசத்தில் அவருக்கு இருந்த ஆழ்ந்த நம்பிக்கைக்கும், அவரிடம் வீறுகொண்டு கனிந்து நின்ற தேசபக்திக்கும் எல்லை இல்லை.

உண்மைகளை எடுத்துக் கொள்வதில், வழிகாட்டிகளாக மற்றவர்களைக் கொள்வதில் காந்தியடிகள், இந்திய எல்லையோடு நின்றுவிடவில்லை. டால்ஸ்டாயை, ரஸ்கினை, தோரோ ஆகிய ரஷிய, பிரிட்டிஷ், அமெரிக்க ஞானிகளை காந்தியடிகள் போற்றிப் புகழ்ந்ததோடு அவர்களிடமிருந்து வாழ்க்கைக்கு வேண்டிய பல்வேறு உண்மைகளை பணிவோடு கற்றுக்கொள்ளவும் செய்தார்.

சிறந்த மனிதத்துவவாதியும், உலகு புகழ் பிரஞ்சு எழுத்துக் கலைஞருமாகிய ரோமேன் ரோலண்ட், காந்தியடிகளின் வாழ்க்கை வரலாற்றைக் கற்றுத் தெளிந்து, 'காந்தியடிகள், உலகப் பொது கருத்துக்களின் மிகச் சிறந்த பிரதிநிதி' என்று முடிவுகட்டுகிறார். உலக முழுவதிலுமுள்ள அடக்கி ஒடுக்கப்பட்ட மக்களின் நல்வாழ்வில் காந்தியடிகளுக்கு இருந்த நேர்மையான அக்கறையையும், உண்மையை அறிவதில் அவருக்கு இருந்த இடையருத பெரு முயற்சியையும், உலகப் பொது மக்கள் சமுதாய, சன்மார்க்கப் புதுவாழ்வு பெறுவதற்கான வழிகளில் அவர் காட்டிய ஊக்கத்தையும் ஆக்கத்தையும் ரோமேன் ரோலண்ட் உச்சிமேல் வைத்து மெச்சுகிறார்.

நாம் காந்தியடிகளின் தத்துவஞானக் கண்ணோட்டத்தை அப்படியே முழுமையாக ஏற்றுக்கொள்கிறவர்கள் அல்ல என்ற உண்மையை மறைத்து வைக்க விரும்பவில்லை.

ஆனால், காந்தியடிகள் ஒரு குறிப்பிட்ட காலத்தில், ஒரு திட்டவட்டமான உலகக் கண்ணோட்டத்தோடு, ஒரு திட்டவட்டமான வளர்ச்சிப் பாதையைப் பொறுக்கி எடுத்து தமது கருத்தோட்டத்தைச் செலுத்தி வந்தார் என்பதை நாம் பார்க்க வேண்டும். பெரும்பாலும் காந்தியடிகளின் கொள்கைப்படியும் அவர் உருவாக்கிய முறைப்படியும் நீண்ட காலம் இடைமுறியாது நடந்த இந்திய விடுதலைப் போராட்டத்தில் நிகழ்ந்த எத்தனையோ வீர தீர நிகழ்ச்சிகள் நமது நேர்மை [illegible] உண்மையான மகத்தான சக்தியை [illegible] த்தன என்பதை நினைவு கூர வேண்டும்.

எந்தக் கருத்து மாறுபாடு [illegible] பெருமக்களின் இடையே அங்கீகரிக்கப்பட்ட தனிப் பெரும் தலைவர் காந்தியடிகளே என்பதை நாம் ஏற்றுக்கொண்டே ஆகவேண்டும்.

மகோன்னதமான மனிதத் தன்மை மிக்க லட்சியங்களை நமக்கு அருளிய காந்தியடிகளின் நினைவு, பாரதப் பெருநாட்டாருக்கு மட்டுமல்ல, உலகப் பெருமக்களுக்கெல்லாம் இனிக்கும்.

# மெட்ரிக்முறை என்ருல் என்ன?

## புதிய முகத்தல், நீட்டல், நிறுத்தலளவை பற்றிய விளக்கம்

சென்னை, செப். 30—

புதிய மெட்ரிக் முறை அக். 1-ந் தேதியிலிருந்து சென்னை, செங்கல்பட்டு, தென் ஆற்காடு ஆகிய ஜில்லாக்களில் அமுலுக்கு வருகிறது. கீழ்வருவது சர்க்கார் செய்தி ஸ்தாபனத்தின் விளக்கம்:

இப்போது நம் நாட்டில் புழக்கத்திலுள்ள அளவுகளும் எடைகளும் ஒரே சீராக இல்லை. கிட்டத்தட்ட 143 வகையான அளவுகளும் எடைகளும் இப்போது இருந்து வருகின்றன. ஒரே பெயரில் உள்ள எடைகளும் அளவுகளும் கூட வெவ்வேறு அளவுகளைக் குறிப்பிடுகின்றன. உதாரணமாக, மணங்கு என்னும் ஒரே பெயரில் 100-க்கும் மேற்பட்ட வகையான எடைகள் குறிக்கப்படுகின்றன. 280 தோலா கொண்ட மணங்கு முதல் 8320 தோலா கொண்ட மணங்குவரை பலவகையான மணங்குகள் புழக்கத்தில் உள்ளன. இடத்துக்கு இடம் ஒரே பெயருள்ள எடையின் அளவு வேறுபடுகிறது. ஒரு இடத்திலேயே கூட வெவ்வேறு பொருட்களுக்கும் ஒரே பெயரில் உள்ள எடையின் அளவு வேறுபாடு இருக்கிறது.

### உற்பத்தியாளருக்கு நஷ்டம்

எடைகளிலும் அளவுகளிலும் பல்வேறு முறைகள் இருப்பதனால் குழப்பமும் ஏற்படுகிறது. இக் குழப்பத்தைத் தங்களுக்கு சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ளுகிறார்கள் சில வியாபாரிகள். ஒரே பெயருள்ள எடைகளில், வாங்கும்போது அதிக அளவுள்ள எடைக் கல்லையும், விற்கும்போது குறைந்த அளவுள்ள எடைக் கல்லையும் உபயோகிக்கும் வியாபாரிகளும் இருக்கிறார்கள். இதனால் உற்பத்தியாளர்களுக்கு நியாயமாகக் கிடைக்க வேண்டிய ஊதியமும் கிடைக்காமல் போகிறது. எடைகளிலும் அளவுகளிலும் பலப்பல முறைகளிருப்பதாலும், கணக்கிடுதலில் ஒரே மாதிரியான முறை பின்பற்றப்படாததினாலும் வீணுகப் பொழுதையும் மூச்சையும் தொலைக்கவேண்டியுள்ளது.

### ஒரே சீரான முறை

எடைகளையும் அளவுகளையும் மெட்ரிக் முறையில் கணக்கிடும் பழக்கம் ஏற்பட்டால் மேற்குறிப்பிட்ட குழப்பங்கள் எல்லாம் தீர்ந்துவிடும். பார்லிமெண்ட் சட்டம் ஒன்று (எடைகள் - அளவுகளின் தர நிர்ணயச் சட்டம் 1956) இந்த முறைக்குரிய அடிப்படை அளவுகளை வரையறுத்து அமைத்திருக்கிறது. மெட்ரிக் முறையைப் பொதுவாக அமுலாக்கும் இச்சீர்திருத்தம் 1958 அக்டோபரில் தொடங்கும்; 1966ல் முடிவு பெறும். தொடங்கியதிலிருந்து மூன்று ஆண்டுகள்வரை மெட்ரிக்முறையோடு இப்போது உள்ளஎடை—அளவு முறைகளும் நடைமுறையில் இருக்கும்.

### மெட்ரிக் முறை என்பது என்ன?

இந்த முறையிலுள்ள அடிப்படையான அளவு மீட்டர். இந்தப் பெயரே இந்த முறைக்கும் பெயராகி மெட்ரிக் முறை என முங்கி வருகிறது. மீட்டரின் மூல அளவு, பிரான்ஸ் நாட்டின் சிவர்ஸ் என்னும் இடத்தில் உள்ள அகில உலக எடைகள் அளவுகள் மன்றத் (Bureau) தில் வைக்கப் பட்டிருக்கிறது. இந்த முறை தசாம்ச முறையிலேயே கணக்கிடப்படுகிறது. (தசாம்ச முறை நாணயங்கள் ஏற்கனவே நமக்குப் பழக்கப்பட்டிருக்கின்றன) தசாம்ச முறையில் கணக்கு முறை பத்தின் பெருக்கத்தில் செல்லும். அதாவது, அடிப்படை அளவில் பத்துக் கொண்டது ஒரு பத்து; பத்து பத்துக்கள் கொண்டது 100; 10 நூறுகள் கொண்டது ஆயிரம் என்ற முறையில் செல்லும். நீளம் எடை, கனபரிமாணம் முதலிய எல்லா அளவுகளிலும் இலக்கப் பெருக்கங்கள் பத்துப் பத்தாகவே இருக்கும்.

### அடிப்படை அளவுகள்

பொதுவாகப் புழக்கத்திலிருக்கப்போகிற மெட்ரிக் அடிப்படை அளவுகள் பின்வருமாறு:

எடை:—

கிலோகிராம் = { சுமார் $3\frac{1}{2}$ சேர் அல்லது 86 தோலா அல்லது 2 பவு. 3 அவு.

நீளம்:—

மீட்டர் = $39\frac{3}{8}$ அங்குலம்

கொள்ளளவு:—

லிட்டர் = { 0.22 இம்பீரியல் காலன் அல்லது 86 தோலா நல்ல தண்ணீர் அளவு.

இவற்றில் பெருக்கங்களைக் காட்ட டெக்கா (10 தடவை) ஹெக்டா ($10 \times 10 = 100$ தடவை), கிலோ ($10 \times 10 \times 10 = 1000$ தடவை) முதலிய சொற்கள் (முன்னால்) சேர்க்கப்படும். கீழ்வாய் இலக்கங்களைக் குறிக்க டெசி (பத்தில் ஒன்று), செண்டி (100ல் ஒன்று) மில்லி (1000ல் ஒன்று) என்னும் சொற்கள் (முன்னால்) இணைக்கப்படும்

உதாரணமாக:

கீழ்வாய் இலக்கங்கள்:

10 மில்லிமீட்டர் = 1 செண்டிமீட்டர்

10 செண்டிமீட்டர் = 1 டெசிமீட்டர்

10 டெசிமீட்டர் = 1 மீட்டர்

பெருக்கங்கள்

10 மீட்டர் = 1 டெகாமீட்டர்

10 டெகாமீட்டர் = 1 ஹெக்டாமீட்டர்

10 ஹெக்டாமீட்டர் = 1 கிலோமீட்டர்

### எளிமையான முறை

இப்போதுள்ள அளவு எடைகளைக்கில் (வாய்ப்பாடுகள்) பல முறைகள் இருப்பது கணக்கிடுவதில் சிரமமுண்டாக்குகிறது. மெட்ரிக் முறையில் இந்தச் சிக்கல்கள் இல்லாததால், கணக்கு வகைக்கு இந்த முறை மிகவும் எளிமையானது. உதாரணமாக, ஒரு கிலோ கிராம் 90 நயாபைசா வீதம் 4 கிலோ கிராம் 140 கிராம் சர்க்கரையின் விலையைக் கண்டு பிடிக்க வேண்டுமானால் $4.14 \times 0.90 = 3.726$ அல்லது ரூ. 3.73 என்று இலேசாகக் கணக்குப் போட்டு விடலாம். ஆனால் அதே நேரத்தில், ஒரு சேர் 13 அணு 6 பைசா வீதம் 4 சேர் 7 பலம் சர்க்கரையின் விலை என்ன என்று கண்டு பிடிப்பது மிகவும் கடினமாகும். பல்வேறு வாய்ப்பாடுகளைப் படித்து பொழுதையும் ஆற்றலையும் வீணுக்கும் இளம் மாணவர்களுக்கும் எளிமையான இந்த மெட்ரிக் முறை ஓர் வரப்பிரசாதமாகும். எனவே மெட்ரிக் முறை எல்லா வகையிலும் வசதியானது என்பது தெளிவு.

### நிலைபெற்றுள்ள முறை

மெட்ரிக் முறையின் எளிமையும் வசதியும் பல நாடுகளைக் கவர்ந்துள்ளன. ஆதலால் உலகின் 5ல் நாலு பங்கு நாடுகளில் இம்முறை மேற்கொள்ளப்பட்டிருக்கிறது. மேலும், மெட்ரிக் முறைக்கு அடிப்படையாக உள்ள தசாம்ச முறை நமது நாட்டில் தான் தோன்றியது. எனவே நமது நாடும் இந்த முறையை மேற்கொள்ளுவதுதான் பொருத்தமாகும்.

மெட்ரிக் முறை நமக்கு முற்றிலும் புதுமையானதுமல்ல. ஏற்கனவே, சிற்சில துறைகளில் நாம்இந்தமுறையை பயன்படுத்தியே வருகிறோம். ரேடியோவில் 337.1 மீட்டர் அல்லது 41.32 மீட்டர் என்றெல்லாம் மீட்டர் வகையிலேயே நிலையங்களைத் திருப்பி நிகழ்ச்சிகளைக் கேட்கிறோம். விளையாட்டுப் பந்தயங்களில் 100 மீட்டர் 400 மீட்டர் ஓட்டங்களை நாம் அறிவோம். மீட்டர்கேஜ் ரெயில்வே என்று சொல்லும்போது, தண்டவாளங்களுக்கு இடையிலுள்ள தூரம் ஒரு மீட்டர் என்பதையே சொல்லுகிறோம். டாக்டர் இன்ஜெக்ஷனுக்குரிய மருந்துகளை மெட்ரிக் அளவுப்படியே எடுத்துக் கொள்ளுகிறார்.

மெட்ரிக் முறை பழக்கத்தில் வரவர அதிலுள்ள சொற்களெல்லாம் நமக்குப் பழக்கப்பட்டு விடும். மெட்ரிக் முறை முழுவதுமாகப் பழக்கத்தில் வரும்போது இப்போதுள்ள முறைகளெல்லாம் மறைந்துவிடும்.

---

மேலும் இனிக்கும், மென்மேலும் இனிக்கும்!

பண்பாடும், மக்கள் அன்பும், பொதுநல நேர்மையும் குறைந்து, தேசச் சீரமைப்பு நொண்டி அடிக்கிறது நமது நாட்டில். அணு ஆயுத யுத்தம் வெடிக்குமோ என்ற பயப்பீதி ஆட்டம் போடுகிறது, உலகத்தில். இந்தச் சூழ்நிலையில் காந்தியடிகளின் புனித நினைவு நம்மை நல்வழி செலுத்த உதவுமாக!

## பாட்டாளி வர்க்கப் போராட்டத்தில் தி. மு. க. அலட்சியம்

### "எனவே ராஜினுமா செய்கிறேன்"

காவேரிநகர், செப். 27—

காவேரிநகர் தி. மு. கழக உறுப்பினரும், தி. மு. க. நடத்திய போராட்டங்களில் பங்குகொண்டு சிறை சென்றவருமான திரு கே பி முத்து, தான் தி. மு. கழகத்திலிருந்து விலகிக்கொண்டதாக அறிவிக்கிறார் அவர் நமக்கு எழுதிய கடிதத்தில் "நான் 20 ஆயிரம் பீடித் தொழிலாளர்கள் போராட்டத்தை ஆதரித்ததால் என்னை கழகத் துரோகி என்று தி. மு க. தோழர்கள் ஏசினார்கள். இந்த சம்பவத்திற்குப் பிறகு எட்டயபுரம் தோழர் என். தேவன் இங்கு தி. மு. க.வின் போக்குகளை எடுத்து விளக்கியது எனக்கு தி. மு. க.வின் மேல் இருந்த பற்றைத் தகர்த்தது. தொழிலாளி வர்க்கப் போராட்டத்தில் தி. மு. க. காட்டும் அலட்சியப் போக்கு என்னை அக்கட்சியிலிருந்து வெளியேறும்படி செய்தது என்று குறிப்பிடுகிறார்.

## புதியமுறை நிறுவை, அளவைபற்றிய மசோதா

### சென்னை சட்டசபையில் நிறைவேற்றம்

சென்னை, செப். 29—

மெட்ரிக் முறையில் நிறுத்தல், முகத்தல், அளத்தல் முதலியவைகளை மேற்கொள்ளும் மசோதாவின் மூன்ருவது வாசிப்பையொட்டிய விவாதம் இன்று சபையில் தொடர்ந்தது.

ஏ. கோவிந்தசாமி (திமுக) நாகராஜமணியகாரர் (காங்.) கே. சட்டநாதன், (சுயே) எஸ். எம். அண்ணுமலை (திமுக) வி. கே. கோதண்டராமன் (கம்யூ.) வி. கே. ராமசாமி முதலியார் ஆகியோர் விவாதத்தில் பங்கெடுத்துக்கொண்டனர். கே. சட்டநாதன், எம். ஜகனுதன் ஆகியோர் தந்த திருத்தங்கள் அனைத்தும் நிராகரிக்கப்பட்டன.

முதலில் நகரப்புறங்களிலும் பொது ஸ்தாபனங்களிலும், தொழில்துறை நிறுவனங்களிலும், பஞ்சாலை, இதர தொழில் ஸ்தாபனங்களில் இந்த முறையை முதலில் அமுல் செய்யலாம் என்றும் ஓரளவு படித்தவர்கள் இதைப் புரிந்து கொண்டபின் பெரும்பான்மையினராயுள்ள பாமர விவசாய மக்களிடையே இம்முறையை அறிமுகப்படுத்தலாம்என்றும் கோரிய கே. சட்டநாதனின் ஆலோசனைகள் அரசாங்கத் தரப்பினரால் பாராட்டப்பட்டாலும் ஏற்றுக் கொள்ளப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

பின்னர், விவாதங்களுக்கு அமைச்சர் எம். ஏ. மாணிக்கவேலு பதிலளித்தார். அதன் பின்னர்மசோதா நிறைவேறியது.

## மொழிவாரி ராஜ்யத்தையே பெரும்பாலான எம். பிக்கள் ஆதரிப்பர்

### ஜெயப்பிரகாஷ் தகவல்

பம்பாய், செப். 28—

மக்கள் சபையில் பார்லிமெண்ட் உறுப்பினர்களுக்கு சுதந்திரமாக வாக்களிக்க வாய்ப்பளிக்க முடியுமானால் பம்பாய் மாகாணத்தை சம்யுக்த மகாராஷ்டிரம், மகாகுஜராத் என்ற இரு மொழிவாரி ராஜ்யங்கள் நிலவுவதையே அவர்களில் காங்கிரஸ் உறுப்பினர் உள்ளிட்ட பெரும்பாலோர் ஆதரிப்பார்கள் என்று ஜெயப்பிரகாஷ் நாராயண் பி. சோ. ஊழியர் கூட்டத்தில் கூறினர்.

'தியாகிகள்சின்ன' விஷயத்தில் ஆமதாபாத் நகரசபை எடுத்த முடிவுக்கு எதிராக பம்பாய் சர்க்கார் தலையிட்டதை அவர் கண்டித்தார். இவ்வாறு தலையிடுவது ஜனநாயக நடப்புக்கே பாதகம் விளைக்கும் என்று சுட்டிக் காட்டினர்.

## பாட புத்தகங்களைத் தேசிய மயமாக்குவது 1961-ம் ஆண்டில்தான்

### சட்டசபையில் அறிவிப்பு

சென்னை, செப். 29—

ஒன்றிலிருந்து ஐந்து வகுப்புகள் வரையும் (நான்காம் வகுப்பு நீங்கலாக) 1960-61 லிருந்துதான் அரசாங்கம் பாட புத்தகங்களை வெளியிடும் என்றும் நான்காவது வகுப்புக்கு 1961–62 ல் பாட புத்தகங்கள் வெளியிடப்படுமென்றும் என். கே. பழனிச்சாமியின் கேள்வி யொன்றுக்குப் பதிலளிக்கையில் கல்வி யமைச்சர் குறிப்பிட்டார்.

இதை யொட்டி ஏ. வி. பி. ஆசைத்தம்பி. பி. ஜி. மாணிக்கம், வி. கே. ராமசாமி முதலியார் ஆகியோர் துணைக் கேள்விகள் எழுப்பினர்.

# ஆசிரியருக்குக் கடிதங்கள்

### வேறிடத்திற்கு மாற்றுங்கள்

ஐயா,

சிங்காநல்லூர்(கோவை) கரும்புக்கடை மைதானத்தில்போலீஸ் ஸ்டேஷன் ஒன்று கட்டப்போவதாகத் தெரிகிறது. இந்த மைதானத்தில் வருடந்தோறும்அரவான் பண்டிகை என்ற ஒரு திருவிழா நடைபெற்று வருகிறது. தொழிற்சங்க விவசாய சங்கக் கூட்டங்கள் நடைபெறுகின்றன. வேறு பல காரியங்களுக்கும் மைதானம் பயனுள்ளதாக இருக்கிறது. எனவே இங்கு போலீஸ் ஸ்டேஷன் கட்டாமல் வேறிடத்திற்கு மாற்ற வேண்டும் என்று கோருகிறன்.

பழனிசாமி,
சிங்காநல்லூர்.

### இதை அனுமதிப்பதேன்?

ஐயா,

பாதிரிகளும் பணமும் என்ற தலைப்பில் அந்நியப் பணம் வருவதை நவஜீவனில் வெளிவந்த செய்தியை ஜனசக்தியில் பிரசுரித்திருந்ததைப் பார்த்தேன். அரசியல் சட்டப்படி இவ்வாறு செய்வது சரியா? மதத்தின் போர்வையில் உள் விவகாரங்களில் தலையிடுவது நியாயமா? கேரளத்தில் இந்த உதவியுடன் தானே கிருஸ்டோபர் சங்கமும், சாந்தி சேனையும் நடக்கின்றன. சர்க்கார் ஏன் நடவடிக்கை எடுக்கக் கூடாது. தேசத் துரோகமான வேலைகளை அனுமதிப்பதேன்.

திருவேங்கடம்
பெண்ணுடம்

### குடியாத்தம் பகுதி மக்களின் குறைகள்

ஐயா,

இங்கு வைத்திருங் குப்பம் உட்பட்ட கிராமங்களுக்குத் தண்ணீர் வசதி இல்லை. எனவே குடியாத்தம் நகரை அடுத்துள்ள மூர்த்தாஜுவில் நீர்த்தேக்கம்அமைக்கப் படவேண்டும்.

மாரிக்குப்பம் ஏரி மதகுகள் சரியாக இல்லை. இவற்றில் தண்ணீர் கசிகிறது. இதை மராமத்துச் செய்ய வேண்டும். பாலாற்றில் நிலையாக நீர்வர ஏற்பாடு செய்ய வேண்டும். ஏழை விவசாயிகளுக்குக் கடன் உதவி செய்ய வேண்டும். தோல் பொருள்கள் செய்ய ஒரு தொழிற்சாலை நிறுவப்பட வேண்டும். சர்க்கார் கவனிக்குமா!

வாக்காளர்.
குடியாத்தம்.

### இதுதானு ஹரிஜன சேவை?

ஐயா,

காங்கிரஸ் ஹரிஜன சேவை பற்றி மந்திரிமார் புகழ்மாலை பாடுகின்றனர். மேட்டூரில் கடந்த 25 வருடங்களுக்கு மேல் சர்க்கார் தோட்டத்தருகில் குடியிருக்கும் ஹரிஜனங்கள் வெளியேற வேண்டும் என்று வழக்குப் போட்டு வம்பு செய்கின்றனர் அதிகாரிகள். இதுபற்றி மந்திரி கக்கன் இங்கே வந்த போது மகஜர் கொடுக்கப்பட்டது. ஆனால் அவர்களுடைய பிரச்சினைக்கு இதுவரையில் பரிகாரம் கண்டதாகத் தெரியவில்லை இதுவா ஹரிஜன சேவை?

வி. கந்தசாமி
மேட்டூர்

### மான்யம் உதவுக

ஐயா,

விருத்தாசலம் தாலுக்கா தொளார் கழக உயர்நிலைத் துவக்கப்பள்ளியில் 24-3-58 முதல் சுமார் 120 மாணவர்களுக்கு இலவச பகல் உணவு அளித்து வருகிறோம். இதற்கான 30 மூடை நெல் கிராம மக்கள் நன்கொடை தந்துள்ளனர். பள்ளிக்கூடத்தைப் பார்வையிட்ட கல்வி இன்ஸ்பெக்டர் சர்க்கார் மான்யத்திற்கு சிபார்சும் செய்தார். இதுவரையில் மான்யம் கிடைக்கவில்லை. சம்பந்தப்பட்ட அதிகாரிகள் கவனித்து மான்யம் வழங்க ஏற்பாடு செய்வார்களா?

ஆதிமூல படையாச்சி,
தொளார்.

### நிர்வாக ஊழல்

ஐயா,

கணியூர் பஞ்சாயத்து நிர்வாகம் வழக்கின் காரணமாக கோவை மத்தியச்சிறையில் இருக்கும் ஒரு நகர சுத்தித் தொழிலாளியான ஆறுமுகம் என்பவன் கைரேகை வைத்து ரூ. 38-12-0 தொகை பெற்றுக் கொண்டிருப்பதாகத் தெரிகிறது. இது பற்றிப் புகார் செய்யப்பட்டு 25–7–58 ல் மடத்துக்கு போய்போலீஸ் இன்ஸ்பெக்டர் சம்பள லிஸ்டுகளை எடுத்துச் சென்றார். இது வரை வேறு எந்த நடவடிக்கைகளும் நடத்தியதாகத் தெரியவில்லை. சம்பந்தப்பட்ட அதிகாரிகள் கவனிப்பார்களா?

எம். வேலுச்சாமி,
கணியூர்.

## தந்திக் கட்டணங்கள், உணவு பொருள்களின் விலை உயர்வு

### (சட்டசபையில் கேள்வி நேரம்)

சென்னை, செப். 29—

அண்மையில் தொடங்கப்பட்டுள்ள "நாம் தமிழர்" இயக்கத்தினால் வெளிநாடுகளிலுள்ள தமிழர்கள் வெகுவாகப் பாதிக்கப்பட்டிருப்பது பற்றிய விவரங்கள் அரசாங்கத்திடம் இருக்கின்றனவா என்று ஏ. ஏ. ரஷீத் கேட்ட கேள்விக்கு அத்தகைய விவரங்கள் இப்போது அரசாங்கத்திடம் இல்லை என்று எழுத்து மூலம் பதிலளிக்கப்பட்டது.

### தந்திக் கட்டணங்கள்

மா. பா. சாரதியின் கேள்வியொன்றுக்குப் பதிலளிக்கையில், தபால் தந்திக் கட்டணங்கள் ஆண்டொன்றுக்கு ரூ. 50 லட்சம் எனவும்இதுமேலெழுந்தவாரியாகக் கணக்கில் எடுக்கப்பட்டதெனவும் டெலிபோன் கட்டணங்கள் ரூ. 10 லட்சம் வரை தேறுமெனவும் குறிப்பிடப்பட்டது.

### கிராமப் படங்கள்

1953–54 முதல் 1957–58 வரையுள்ள கடந்த ஐந்தாண்டுகளில் வடஆற்காடு ஜில்லாவில் செங்கம் தாலூகா படம் மாத்திரம்தான் 1956–57ல் புதுப்பித்து அச்சிடப்பட்டதெனவும் அந்த ஜில்லாவில் ஒரு கிராமத்தின் படம்கூட புதுப்பித்து அச்சிடப்படவில்லை எனவும் இன்னொரு கேள்விக்குப் பதிலளிக்கப்பட்டது.

### பீடி ஏற்றுமதி

பி. ஜி. மாணிக்கத்தின் கேள்வியொன்றுக்குப் பதிலளிக்கையில், 1957-58ல் சென்னை மாகாணத்தின் பல துறைமுகங்களிலிருந்தும் ஏற்றுமதியான பீடிகள் பற்றிய விபரங்கள் சென்னைத் துறைமுகத்திலிருந்து சிங்கப்பூருக்கு ரூ 2,28,792க்கும் மலேயாவுக்கு ரூ. 49,976க்கும் நாகப்பட்டணத்திலிருந்து இலங்கைக்கு ரூ. 7,01,878க்கும் சிங்கப்பூருக்கு ரூ. 4,83,105க்கும் மலேயாவுக்கு ரூ. 73,705க்கும் தனுஷ்கோடியிலிருந்துஇலங்கைக்குரூ.62,74,018க்கும் தூத்துக்குடியிலிருந்து இலங்கைக்கு ரூ. 80,80,831க்கும் ஏற்றுமதி செய்யப்பட்டது.

### போக்குவரத்துத் தொழிலாளர்களுக்குக் குறைந்தபட்ச சம்பளம்

தென் ஆற்காடு ஜில்லாவிலுள்ள பஸ் முதலாளிகள் அனைவரும் குறைந்தபட்ச சம்பளங்கள் (சென்னை) பற்றிய விதிகளை (1953) அமுல் நடத்துகின்றனரென்றும் இவ்வாறு அமுல் நடத்தாதவர்கள் பற்றிப் புகார்கள் ஏதும் அரசாங்கத்துக்குக் கிடைக்கவில்லை என்றும் கேள்வியொன்றுக்குப் பதிலளிக்கப்பட்டது.

### உணவுப் பொருள்களின் விலை

உணவுப் பண்டங்களின் விலை ஏற்றத்தைத் தடுக்க சாத்தியமான நடவடிக்கைகள் அனைத்தையும் அரசாங்கம் எடுத்திருக்கிறது எனவும் விலை ஏற்ற இறக்கங்களை அரசாங்கம் உன்னிப்பாகக் கவனித்துவருகிறது என்றும் ஏ. வேதரத்தினத்தின் கேள்வி ஒன்றுக்குப் பதிலளிக்கையில் அமைச்சர் பக்தவத்சலம் குறிப்பிட்டார்.

### ஆந்திராவிலிருந்து மின்சாரம்

சென்னை மாகாணத்தில் இப்போது நிலவும் மின்சார சக்திப் பற்றுக்குறையை நீக்கும் பொருட்டு ஆந்திராவிலிருந்துமின்சார சக்தியை வாங்குவது பற்றி அரசாங்கம் ஏதாவது உடன்பாட்டுக்கு வந்திருக்கிறதா என்று என். கே. பழனிச்சாமி கேட்டார். உடன்பாடு ஆலோசனையில் இருப்பதாகவும் மேலும் சென்னை ராஜ்ய பிரதம இஞ்சினியரின் சிபாரிசுகளை அரசாங்கம் பரிசீலனை செய்து வருவதாகவும் மின்சாரத்துறை அமைச்சர் வி. ராமையா பதிலளித்தார். உத்தேச உடன்பாடு நீண்டகால அளவினதா என்ற என். கே. பழனிச்சாமியின் துணைக் கேள்விக்கு ஆந்திரா, கேரளா ஆகிய ராஜ்யங்களிலிருந்து நமது ராஜ்யம் பெறும் மின்சார சக்தி நமது தேவைகள் சுயபூர்த்தி செய்யப்படுவதுவரை தொடரும் என்று பதிலளிக்கப்பட்டது.

### கீழைத்தங்கியாறு திட்டம்

திருத்துறைப்பூண்டி தாலுக்காவில்ரூ. 18,500 செலவில் தொடங்கப்பட்டிருக்கும் கீழைத்தங்கியாறு திட்டம் விரைவில் பூர்த்தியாகுமென்று ஏ. வேதரத்தினத்தின் கேள்விக்குப் பதிலளிக்கப்பட்டது.

### அரசாங்க போக்குவரத்துத்துறை வருமானம்

சென்னை அரசாங்கம் நடத்தும் பஸ் போக்குவரத்தில் கடந்த மூன்ருண்டுகளில் நிகர வருமானம் முறையே ரூ. 20 லட்சம், ரூ. 26 லட்சம், ரூ. 17 லட்சம் கிடைத்திருக்கிறதென டி.எஸ். ராமசாமியின் கேள்விக்குப் பதிலளிக்கப்பட்டது.

### ஜில்லாக்களின் பரப்பும், ரோடுகளின் விபரங்களும்

நமது மாகாணத்தில் உள்ள ஜில்லாக்களின் பரப்பும் ஒவ்வொரு ஜில்லாவிலும் உள்ள சிமிண்ட், தார், கப்பி, மண் ரோடுகளின் அளவும் கீழே தரப்படுகின்றன:

செங்கற்பட்டு (3,103 ஏகர்) ரோடுகளின் மொத்த அளவு 736 மைல்கள்; தென் ஆற்காடு (4,204 ஏகர்) 706 மைல்கள்; தஞ்சாவூர் (3,470 ஏகர்) 837 மைல்கள்; திருச்சிராப்பள்ளி (5,514 ஏகர்) 904 மைல்கள்; மதுரை (4,910 ஏகர்) 767 மைல்கள்; இராமநாதபுரம் (4,849 ஏகர்) 753 மைல்கள்; திருநெல்வேலி (4343 ஏகர்) 681 மைல்கள்; கன்னியா குமரி (700 ஏகர்) 700 மைல்கள்; வட ஆற்காடு (4,654 ஏகர்) 726 மைல்கள்; சேலம் (7051 ஏகர்) 912 மைல்கள்; கோயம்புத்தூர் (6,014 ஏகர்) 1,143 மைல்கள்; நீலகிரி (984 ஏகர்) 217 மைல்கள்.

இந்த விபரங்கள் என். ஆர். தியாகராஜனின் கேள்வியொன்றுக்குப் பதிலளிக்கையில் மராமத்துத் துறை அமைச்சரால் அறிவிக்கப்பட்டன. இந்த ரோடுகள் அனைத்தும் அரசாங்கத்தால் போடப்பட்டவையாகும். இது தவிர ஸ்தல ஸ்தாபனங்கள் அமைத்த ரோடுகளும் உள்ளன.

## கோவை நகர சுத்தித் தொழிலாளருக்கு உடுப்புகள் வழங்குக

### சட்டசபையில் மருதாசலம் வற்புறுத்தல்

சென்னை, செப். 29—

"கோவை நகரசபையில் வேலை பார்க்கும் சுமார் ஆயிரம் நகர சுத்தித் தொழிலாளர்களுக்கு உடுப்புகள் வழங்குவதை நகரசபை நிறுத்திவிடத் தீர்மானம் செய்துவிட்டது. இதனால் தொழிலாளர்கள் சொல்லொண்ணுத் துன்பப்படுகின்றனர். இது அவசரமும் அவசியமுமான பிரச்னையாகும்" என்று கூறி இந்த நிலைமையை நில வருமானத் துறை அமைச்சரின் கவனத்துக்கு கொண்டு வந்தார் மருதாசலம்.

இதன் மீது மேலும் பேசுகையில், நகர சுத்தித் தொழிலாளர்களில் பெண்களுக்கு ஆண்டுக்கு இரண்டு புடவைகளும் இரண்டு ரவிக்கைகளும் ஆண்களுக்கு ஆண்டுக்கு இரண்டு கால் சட்டைகள், இரண்டு துண்டுகள், இரண்டு சட்டைகள் ஆகியவையும் வழங்கி வந்தது அவர்களுக்கு ஓரளவுக்கு உதவிகரமாக இருந்ததென்றும் மறுபடியும் அவற்றை வழங்குவதற்கு அரசாங்கம் ஆவன செய்ய வேண்டுமென்றும் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு உதவிகள் செய்வதாகக் கூறிக்கொள்ளும் காங்கிரஸ்காரர்கள் இந்த நியாயமான கோரிக்கையை அலட்சியப்படுத்தக் கூடாது என்றும் கூறினர்.

அமைச்சர் பதிலளிக்கையில், உடுப்புகள் வழங்குவது உதவி நடவடிக்கைதான் என்றும் தந்து தான் தீர வேண்டுமென்று அரசாங்கம் நகரசபையை வற்புறுத்த முடியாதென்றும் கூறினர்.

## மேற்கு ஐரோப்பாவிற்கு புகழ்மாலை!

### தமது சுற்றுப்பிரயாண அனுபவம் பற்றி ஜெயப்பிரகாஷ்

பம்பாய், செப். 28—

இங்கு இன்று நடைபெற்ற கூட்டமொன்றில் ஜெயப்பிரகாஷ் நாராயணன் தமது மேற்கு ஐரோப்பிய பிரயாண அனுபவங்களை விளக்கினர். இந்த நாடுகளில் சோஷலிஸ்ட் இயக்கங்கள் அடைந்துள்ள வெற்றிகள் பற்றி தாம் கொண்டிருந்த சில தப்பபிப்பிராயங்களையும், மதிப்பீடுகளையும் தமது சுற்றுப்பயணம் போக்கிவிட்டது என்று கூறினர்.

இந்த நாடுகளில் தாம் தங்கியிருந்தபோது, சோஷலிஸ்ட் இயக்கங்களாலும், நவீன தொழில் நுணுக்க வளர்ச்சியாலும் எப்படி தொழிலாளர் வர்க்கம் ஒரு திருப்திகரமான வாழ்க்கைத் தரத்தை அடைந்துள்ளார்கள் என்பதை நேரில் தெரிந்து கொண்டதாகத் தெரிவித்தார். இத்தகைய ஒரு வாழ்க்கைத் தரத்தை இந்தியாவில் எண்ணிக் கூட பார்க்கமுடியாது என்றார்.

### சுரண்டல் ஒழிந்து விட்டதாம்

ஜெயப்பிரகாஷ் நாராயணன் தொடர்ந்து பேசுகையில், பணக்காரர்களுக்கும் ஏழைகளுக்கும் இடையே உள்ள இடைவெளி இந்தநாடுகளில் குறுகி விட்டது. மார்க்ஸ், ஏங்கல்ஸ் போன்ருேர் எதிர்த்துப்போராடிய சுரண்டல் இந்த நாடுகளில் பெரும்பாலும் ஒழிக்கப்பட்டுவிட்டது. வேலையில்லாத் திண்டாட்டம், பிணி, மூப்பு பற்றிய பயம் மறைந்துவிட்டது என்றார்.

ஒரு வாழ்க்கை முறை என்கிற வகையில் சோஷலிஸம் இந்த நாடுகளில் இல்லை என்றும் இந்தக் குறைபாட்டை நீக்க மேற்கு ஐரோப்பிய சோஷலிஸ்டுகள் பாடுபட்டு வருகிருர்கள் என்றும் ஜெயப்பிரகாஷ் நாராயணன் கூறினர்.

# இலங்கை இந்தியர் பிரஜா உரிமை

## தொழிலாளர் மாநாட்டில் தீர்மானம்

நுவரேலியா, செப். 28— இலங்கைத் தீவிலுள்ள மனித உரிமைகள் சாசனத்தின் அடிப்படையில் இலங்கையில் நிரந்தரமாகக் குடியேறியுள்ள இந்தியர்களுக்குப் பிரஜா உரிமைகள் அளிக்கப்பட வேண்டுமென்று இலங்கை சர்க்காரைக் கேட்டுக்கொள்ளும் தீர்மானம் ஒன்று இங்கு நடைபெற்ற தொழிலாளர் காங்கிரஸின் வருடாந்திர மாநாட்டில் நிறைவேற்றப்பட்டது.

ஒரு ஐக்ய சோஷலிஸ்ட் இலங்கை என்ற லட்சியத்தை ஆதரித்தும், இந்த லட்சிய சாதனைக்குத் தேசிய சிறுபான்மையினரின் தொழிலாளர் வர்க்கத்தின் மனப்பூர்வமான ஒத்துழைப்பும் உழைப்பும் இன்றியமையாதது எனவும் தீர்மானத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. மொழிப் பிரச்னையில் சம்பந்தப்பட்ட அனைவரையும் கலந்தாலோசித்து முடிவு செய்யக்கோரியும், தொழிலாளர் சம்பளம், தொழிற்சங்க உரிமைகள், முதலியவற்றை வலியுறுத்தியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

மாநாட்டுக்கு எஸ். தொண்டமான் தலைமை வகித்தார்.

## ரைஸ் மில் தொழிலாளருக்கு சம்பள உயர்வு

திருப்பூர் செப்டம்பர் 27— திருப்பூரில் 15 ரைஸ் மில்கள் உள்ளன. இதில் 800 முதல் 900 பேர்கள் வரை வேலை செய்கிறார்கள். 1958-ம் வருஷம் ஜனவரி மாதம் ரைஸ்மில் தொழிற்சங்கம் ஆரம்பிக்கப்பட்டது. சங்கம் இல்லாத காலத்தில் பேக்டரி சட்டம் இல்லாமல் இருந்தது. மேலும் எந்த உரிமையும் அவர்களுக்கு இல்லை. முதலாளிகள் இட்ட சட்டம், கொடுத்தது கூலி என்ற அமைப்பில் இருந்தது. 12 மணி முதல் 14 மணி வரை வேலை வாங்கப்பட்டது. எல்லாத் தொழிலாளர்களும் ஒரே சக்தியாகத் திரண்டு நின்றதின் பேரில் கோரிக்கைகளை பெறமுடிந்தது. (1) வேக்கட்டில் இருப்பவர்களுக்கு 4 ரூபாய் சம்பளம் கொடுக்கப்பட்டு வந்தது. தற்போது 5-8-0 ஆக உயர்த்தப்பட்டது. (2) அல் தொழிலாளர்களுக்கு ரூ. 1-4-0-1-6-0 ஆக இருந்தது. இப்போது ரூ. 1-14-0 ஆக உயர்த்தப்பட்டுள்ளது. (3) செல் உணர்த்தப்பட்டவர்களுக்கு 0-14-0 ஆக இருந்தது. இப்போது ரூ. 1-4-0 ஆக உயர்த்தப்பட்டது. (4) கலால் 2-2-0 முதல் 2-6-0 வரை கொடுக்கப்பட்டது. 8 மணி நேர வேலை அமுல் நடத்தப்பட்டது. சாப்பாட்டிற்கு இடைவேளை, வாராந்திர விடுமுறை, பிரசவ சகாய நிதி, வருடாந்திர ஓய்வு லீவு, முதலியன அமுல் நடத்தப்பட்டுள்ளது என்று கோவைஜில்லாமில் தொழிலாளர் செயலாளர் கே. உதயகுமார் கணபதி அறிவிக்கிறார்.

## வள்ளியூரில் வெற்றி விழா!

வள்ளியூர், செப். 25— வள்ளியூர் பஞ்சாயத்து தேர்தல் முடிவுகள் 21-ந்தேதி வெளியிடப்பட்டது. அன்றுமாலை 5 மணிக்கு வெற்றிபெற்ற சொக்கலிங்கம், எஸ். சுப்பையா, எஸ். கே. வேலாயுதம், எம். வேலாயுதம் முதலியோர் முன்செல்ல செங்கொடியுடன் வெற்றி ஊர்வலம் நடைபெற்றது. ஜில்லாக் கமிட்டி உறுப்பினர் ஆர். நல்லகண்ணு தலைமையில் பொதுக்கூட்டம் நடைபெற்றது. மக்களுக்குச்சேவை புரிவதே பஞ்சாயத்து உறுப்பினர்கள் லட்சியம் என்றும், போலீஸ் பாரபட்சத்தைக் கண்டித்தும் மக்களுக்கு நன்றி தெரிவித்தும், வி. எல். காந்தி உட்பட பலர் பேசினார்கள்.

## பாரதி படிப்பகம்

ஈரோடு, செப். 23— பாரதி படிப்பகத்தின் கூட்டம் 16-9-58-ல் கூடி, பின்வரும் நிர்வாகிகளைத் தேர்ந்தெடுத்தது. தலைவர் சு. பி. கிட்டப்பன், துணை தலைவர் சு. ஆர். சுப்பிரமணியம், காரியதரிசி டி. பி. பொன்னுசாமி, உப காரியதரிசி கே. ஆர். ராமசாமி, பொருளாளர் வி. என். செங்கோட்டையன்.

## கட்டபொம்மன் தினம் கொண்டாட 3 கட்சி தயாரிப்பு

கடலூர், செப். 28— அக்டோபர் மாதம் 3-வது வாரத்தில் கட்டபொம்மன் தினத்தை கொண்டாட முடிவு செய்வது பற்றி கம்யூனிஸ்ட் கட்சி, தமிழரசு கழகம், ஜனநாயக காங்கிரஸ் ஆகிய மூன்று கட்சிகளும், கம்யூனிஸ்ட் கட்சியின் தென்னுற்காடு ஜில்லா செயலாளர் பி. ஜெயராமன் தலைமையில், 8-9-58-ல் கூடி தீர்மானித்தனர்.

## கூட்ஸ் வாகன்கள் தடம் புரண்டது

மதுரை, செப். 29— காட்பாடி விழுப்புரம் பாதையில் மாதி மங்கலத்திற்கும் போளூர் ஸ்டேஷனுக்கும் இடையில் ஒரு கூட்ஸ் வண்டியின் நான்கு வாகன்கள் தடம் புரண்டன.

## மதயாத்திரைக்கும் நகர சபைக்கும் என்ன சம்பந்தம்?

உடுமலை, செப். 28— உடுமலை நகரசபையின் மாஜி சேர்மனும் உதவி சேர்மனும் இந்துமத யாத்திரைகள் செய்து வந்ததற்காக, அவருக்கு வரவேற்புப் பத்திரம் வாசித்தளிக்க வேண்டுமென்று காங்கிரஸ் கட்சி எஸ். மருதமுத்து பிள்ளை 30-8-58 நகரசபைக் கூட்டத்தில் ஒரு தீர்மானம் கொண்டு வந்தார்.

இதுவே, இதர மதத்தினருடைய பரபரப்பு ஏற்படுமென்றும், யாத்திரைக்கும் நகர் நலத்துக்கும் என்ன சம்பந்தமென்றும், நகருக்கு அவர்கள் நன்மை செய்திருந்தால் தனியாக் கூட்டம் நடத்தி, கௌரவிக்கலாமென்றும் கூறி 15-வது வார்டு கவுன்சிலர் திரு. அப்பாவு கவுண்டர் அந்தத் தீர்மானத்தை எதிர்த்தார்.

## தேங்காய் வெட்டும் தொழிலாளருக்கு சம்பள உயர்வு

வத்தலக்குண்டு, செப். 24— கடந்த மாதம் சோழவந்தான், அலங்கார நல்லூர், மேலூர், கோச்சடை வட்டாரங்களில் தேங்காய் வெட்டும் தொழிலாளர்கள் கூலி உயர்வு கோரி, வேலை நிறுத்தம் செய்தனர். தொழிலாளர் பிரதிநிதிகளும் முதலாளிகளின் பிரதிநிதிகளும் கூடிப்பேசி உடன்பாட்டிற்கு வந்தனர். 100 மரத்திற்கு 3 ரூபாய் 50 நயே பைசா என்பது 4 ரூபாய் 25 நயே பைசாவாக உயர்த்தப்பட்டது; கை தேங்காய் 10 கொடுப்பதாகவும் முடிவாயிற்று.

## ஓட்டல் தொழிலாளர் வெற்றி

புதுக்கோட்டை, செப் 28— இவ்வூர் பாம்பே ஆனந்தபவன் காபி கிளப் நிர்வாகம் 7 தொழிலாளர்களைப் பழி வாங்கியது. தொழிற் சங்கம் நடவடிக்கை எடுத்து 4 தொழிலாளர்களுக்கு மீண்டும் வேலை கிடைக்கச் செய்தது. 3 பேர் அங்கு வேலை செய்ய விரும்பாததால், மார்த்தாண்டனுக்கு ரூ. 106-ம், மற்றுமிருவருக்கு நோட்டீஸ் சம்பளமும் வாங்கிக் கொடுக்கப்பட்டது.

# முதலாளிகள் உடன்பாட்டை மீறியதால் மீண்டும் போராட்டம்

## பாக்குத் தொழிலாளர் சங்கச் செயலாளர் கே. வெள்ளிங்கிரி உண்ணுவிரதம்

மேட்டுப்பாளையம், செப். 27— கடந்த மூன்றுமாத காலமாக இவ்வூர் பாக்குத் தோட்டத் தொழிலாளர்கள் தமது நலவுரிமைகளுக்காகப் போராடினார்கள். சங்கச் செயலாளர் கே. வெள்ளிங்கிரி உண்ணுவிரதமிருந்தார். 3-9-58-ல் லேபர் ஆபீசர் முன்னுல் முதலாளிகள் ஓர் உடன்பாட்டுக்கு வந்தனர்.

பழைய ஆட்கள் அனைவரையும் வேலைக்கு எடுத்துக்கொள்வதென்றும் புதிய ஆட்கள் எடுப்பதானால் 10 பழைய ஆட்களுக்கு 1½ என்ற விகிதத்திலேயே புதிய ஆட்கள் எடுப்பதாயும் ஒப்புக் கொண்டனர்.

ஆனால் இப்போது அந்த உடன்பாட்டை மீறி தம்மிஷ்டம்போல் புது ஆட்களை எடுத்து, பழைய ஆட்களுக்கு வேலையில்லாத நிலையை ஏற்படுத்தப் பார்க்கின்றனர்.

இதை ஆட்சேபித்து 25-9-58ல் பெரிய தலைமையில் மிகப்பெரிய கூட்டம் நடைபெற்றது. கூட்டத்தில் பேசிய செயலாளர் வெள்ளிங்கிரி முதலாளிகள் உடன்பாட்டை மீறி நடப்பதைக் கண்டித்தார். முதலாளிகள் ஒப்பந்தத்தைச் சரிவர நடத்தும் வரையில் 27-ந் தேதி முதல் உண்ணுவிரதமிருக்கப் போவதாக அறிவித்தார்.

இன்று பெரிய தோட்ட முதலாளர் ஒருவர் வீட்டின் முன் உண்ணுவிரதம் தொடங்கியுள்ளார். தொழிலாளர் கோரிக்கைகளை ஆதரித்து மாபெரும் ஊர்வலமொன்று நடைபெற்றது. பல வேறு சங்கங்களும், பொது மக்களும் தமது ஆதரவைத் தெரிவித்துள்ளனர். (ந. கி)

## பெரம்பலூர் பஞ்சாயத்து தேர்தல்

### 3 கம்யூனிஸ்ட்கள் தேர்வு

பெரம்பாலூர், செப். 25— பெரம்பாலூர் பஞ்சாயத்து தேர்தல் 18-ந்தேதி நடந்தது. 15 ஸ்தானங்களில் நான்கிற்கு கம்யூனிஸ்டுகள் போட்டியிட்டு மூன்று தொகுதிகளில் பின்வரும் தோழர்கள் வெற்றிபெற்றனர். (3-வது காளிமுத்து(6-வது வார்டு).

6-வது வார்டில் வெற்றிபெற்ற கம்யூனிஸ்ட் தோழர் ஒரு ஹரிஜன். இவரை கம்யூனிஸ்டு என்று பஞ்சாயத்து தலைவரும், நிர்வாக அதிகாரியும் சிறிதுகாலம் முன்பு வேலையிலிருந்து நீக்கிவிட்டனர். காளிமுத்துவின் வெற்றியைப் பற்றி மக்கள் பெரிதும் மகிழ்ச்சி அடைந்திருக்கின்றனர்.

## ரோடியர் மில் தொழிலாளர் வெற்றி

புதுவை, செப்.27— கடந்த 20-ந் தேதி முதல் ரோடியர் மில் நிர்வாகம் சீமை ராட்டினப் பகுதியில் ஆட்டோமாடிக் மிஷினை திணித்து 45 சீமை ராட்டினத் தொழிலாளிகளைப் பறிவாங்கத் திட்டமிட்டது. இதனை எதிர்த்து தொழிலாளர்கள் உள்ளிருப்பு வேலை நிறுத்தம் செய்தார்கள்.

தொழிலாளர்கள் கடந்த பல தினங்களாக உறுதியாக நின்று உள்ளிருப்பு போராட்டம் செய்ததன் விளைவாக, மில் நிர்வாகம் பணிந்து ஓர் சமரச உடன்பாட்டுக்கு வந்தது.

இனி ஆட்டோமாடிக் மிஷினைக் கொண்டுவருவதற்கு முன் தொழிற் சங்கத்தைக் கலந்துகொண்டே எதுவும் செய்வதெனவும் 45 தொழிலாளர்களுக்கு வேறு டிபார்ட்மெண்டுகளில் வேலை தருவது என்றும் வேலை செய்ய சாத்தியப்படாத தொழிலாளர்கள் பற்றி கலந்து பேசி முடிவுக்கு வருவதெனவும், லே-ஆப் தருவதென்றும், அனைவரையும் சேர்த்துக் கொள்வதெனவும் உடன்பாடு ஏற்பட்டது. (ந. கி.)

## வீரப்பன் சத்திரம் பஞ்சாயத்து தேர்தலில் கம்யூனிஸ்ட் வெற்றி

வீரப்பன் சத்திரம், செப், 25— 22-ந்தேதி நடந்த பஞ்சாயத்து போர்டு தேர்தலில் கம்யூனிஸ்ட் கட்சி அங்கத்தினர் வி. ஆர். பொன்னுசாமி வெற்றி பெற்றார். கட்சி ஆதரவு பெற்ற காரியண கவுண்டரும், எம். சின்னுசாமி, நல்லப்பன் கவுண்டர், சாமியப்பன் இருவர்களும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

15 ஸ்தானங்களில் கட்சி உறுப்பினரும் கட்சி ஆதரவு பெற்றவரும் 6 பேர், பி. ம. க. 1, காங்கிரஸ், பி. சோ., சுயேச்சை 8.

காரைக்குடி தேர்தல் வழக்கு

# திரு. சா. கணேசன் அளித்த சாட்சியம் முழுவிவரம்

## ராஜா சர். தேர்தல் கணக்கில் ஒழுங்கீனம்

(நேற்றைய தொடர்ச்சி)

சென்னை, செப். 26 — எதிர் மனுதார் தேர்தல் கணக்கை ஆர். டி. ஓ. ஆபீஸில் பார்த்தேன். அந்தக் கணக்கு முறைப்படி தயாரிக்கவில்லை. எதிர் மனுதாருக்கு ஏற்பட்ட எல்லா செலவுகளும் அதில் வரவில்லை. அபேட்சை மனுத்தாக்கல் செய்வதற்காகவும், சென்னை கார்ப்பொரேஷனில் தான் ஒரு வோட்டர் என்பதை காண்பிப்பதற்குரிய தஸ்தாவேஜுகளை காண்பிப்பதற்காகவும் எதிர் மனுதார் தேவகோட்டை சென்று திரும்பிய செலவு விடுபட்டிருக்கிறது. எதிர் மனுதார் நிரந்தரமாக சென்னையில்தான் வசிக்கிறார். என்னுடைய மனுவில் இதைக் குறிப்பிட்டுள்ளேன். சென்னை முதன் மந்திரி காமராஜ் நாடார், டாக்டர் பி. வரதராஜுலு நாயுடு, மாஜி மேயர் செங்கல்வராயன், ஜெபமணி ஆகியோர் சென்னையிலிருந்தும், வின்செண்ட் திண்டுக்கல்லிலிருந்தும் வந்து பிரசாரம் செய்தார்கள். இவர்களுக்குரிய பிரயாணச் செலவு, சாப்பாட்டுச் செலவு, தங்குமிடச் செலவு முதலியவைகள் சேர்க்கப்படவில்லை. முதன் மந்திரி காமராஜ நாடார் இரு முறை எதிர் மனுதாருக்காக இங்கு வந்து பிரசாரம் செய்திருக்கிறார். பிரசாரக் கூட்டங்களுக்காக கொட்டகைகள் போடப்பட்டிருந்தன. கூட்டங்களில் மைக் லைட் வசதிகள் செய்யப்பட்டிருந்தன. பிரசங்கிகளுக்கு மாலைகள் போடப்பட்டன, பிரசாரக் கூட்டங்களுக்கு நோட்டீஸ்கள் அச்சடித்து வழங்கப்பட்டிருந்தன. இவைகள் எல்லாம் எதிர் மனுதார் செலவில் செய்யப்பட்டிருந்தும் கணக்கில் சேர்க்கப்படவில்லை. தொகுதி முழுமைக்கும் 109 ஓட்டுச் சாவடிகளிருந்தன. ஒவ்வொன்றிற்கும் எதிர் மனுதார் சார்பில் மூன்று ஏஜண்ட் வரை நியமித்திருந்தனர். இவர்களுக்குரிய போக்குவரத்து செலவும் இதர செலவுகளும் ஏற்பட்டிருந்தன. இருந்தும் ஒருசில ஏஜண்டுகளின் செலவும், அதுவும் ஒருசில செலவுகள்தான் கணக்கில் தாக்கல் செய்திருக்கிறார். அவர் நியமித்த 220 ஏஜண்ட்களில் 48 ஏஜண்டுகளுக்குத்தான் கணக்கில் செலவு எழுதப்பட்டிருக்கிறது. அதுவும் போக்குவரத்துச் செலவு தானிருக்கிறது.

எதிர் மனுதார் தன்னுடைய தேர்தல் பிரசாரத்திற்காக 8 மோட்டார் வான்களில் மைக்குகளைப் பொருத்தி உபயோகப்படுத்தினார். இவற்றை நானே நேரில் பார்த்தேன். 12 புதிய ஜீப்கார்கள் நம்பரில்லாமல் ரிஜிஸ்டிரேஷனுக்காக என்ற போர்டுடன் வேலை செய்தன. 24 பிளைமவுத் கார்கள் வேலை செய்தன. இவை அனைத்திற்கும் எந்தவிதமான செலவு கணக்கும் எழுதப்படவில்லை. மேற்கண்ட எட்டு மோட்டார் வான்களும், பனிரண்டு ஜீப்களும், இருபத்திநான்கு பிளைமவுத் கார்களும் ஊர்வலமாக காரைக்குடியின் முக்கிய பாகங்களில் சென்றன. அதற்கு முத்தையா செட்டியாரே தலைமை தாங்கி தனது சொந்தக் காரில் சென்றார். எதிர் மனுதார் தனது சொந்தக்காரை தேர்தல் வேலைகளுக்காக ஆரம்பம் முதல் இறுதி வரை உபயோகப்படுத்தினார். அதற்கான செலவை கணக்கில் தாக்கல் செய்யப்படவில்லை. எதிர் மனுதார் ஓட்டு எண்ணிக்கைக்காக புதுக்கோட்டையிலிருந்து கே. நாகராஜய்யர் என்ற அட்வகேட்டும், சென்னையிலிருந்து பட்டுவய்யர் என்பவரும் வந்திருந்தார்கள். எதிர்மனுதாருடைய காரியதரிசி நிரந்தரமாக சென்னையில் வசிப்பவர். அவரும் வந்திருந்தார். அவர் மதுரையிலிருந்து வந்திருப்பார் என்று கருதுகிறேன். ஏற்கனவே நான் குறிப்பிட்ட ஆர். சாமிநாதய்யர் காரைக்குடியிலிருந்து 16 மைல் தூரத்திலுள்ள இளையாத்தக்குடியிலிருந்து வந்திருந்தார். இந்த ஏஜண்ட்களில் யார் சம்மந்தமாகவும் எந்தவிதமான செலவும் கணக்கில் தாக்கல் செய்யப்படவில்லை. ஓட் எண்ணப்பட்டது மார்ச் மாதம் 6-ந் தேதி, ஆனால் மார்ச் மாதம் 3-ந் தேதிக்குப் பின்னுல் எந்தக் கணக்கும் எழுதப்படவில்லை. எதிர் மனுதார் தேர்தல் வேலைகளுக்காக 23 இடங்களில் தேர்தல் காரியாலயங்கள் வைத்திருக்கிறார். ஆனால் இவற்றிற்கான வாடகை, லைட், சிப்பந்தி செலவுகள் எதுவுமே எழுதப்படவில்லை. எதிர் மனுதார் சென்னையில் வசிப்பவர். அவர் அபேட்சை மனு தாக்கல் செய்ததிலிருந்து முடிவு தெரிவிக்கும் வரை சென்னையிலிருந்து காரைக் குடிக்குப் பல முறை வந்தும் தொகுதி முழுமையும் சுற்றியுமிருக்கிறார். இவற்றிற்கான செலவும் காட்டப்படவில்லை. ஓட்டு எடுத்த அன்று எதிர் மனுதார் ஏஜண்ட்கள் ஏராளமான ஓட்டர்களைச் சேலஞ்ச் செய்திருக்கிறார்கள். அதற்குறிய தொகைகள் கணக்கில் தாக்கல் செய்யப்படவில்லை.

இவ்வாறு பல்வேறு வகைகளிலும் எதிர் மனுதார் கணக்குக்குக் கொண்டுவராது விட்டுள்ள தொகை ரூபாய் 20,000 இருக்கும்.

### தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டிக்கு ரூபாய் 2 லட்சம்

தன்னை காங்கிரஸ் அபேட்சகராக எடுத்து வெற்றி பெறச்செய்வதற்காக எதிர் மனுதார் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டிக்கு 2 லட்ச ரூபாய் கொடுத்தார்.

இந்தத் தொகுதியில் 80,000-க்கு மேற்பட்ட ஓட்டர்கள் இருக்கலாம். எனக்கும் எதிர் மனுதாருக்குமிடையே உள்ள ஓட்டு வித்தியாசம் 1858. நான் இப்பொழுது கூறியவையெல்லாம் தலையிட்டு தொந்தரவு செய்திராவிட்டால் குறைந்தபட்சம் 5,000 ஓட்டுகளாவது எதிர் மனுதாரைக் காட்டிலும் அதிகம் பெற்றுத் தேர்ந்தெடுக்கப் பெற்றிருப்பேன்.

இதற்குப்பின் எதிரி வக்கீலால் குறுக்கு விசாரணை செய்யப்பட்டார்.

# புதுவை பாரதி மில்லில்

## செங்கொடி சங்கத்தின் வெற்றி

புதுவை, செப். 27— கடந்த இரண்டு ஆண்டுகளாக பாரதி மில்லில் வேலை செய்யும் தொழிலாளர்களுக்கு வேலை இல்லாததினுல் பட்டினி இருந்து வருவது உங்கள் அனைவருக்கும் தெரியும். 22-9-58ல் சங்கத்தின் வேண்டுகோளுக் கிணங்க தொழிலாளர்கள் அனைவரும் பாரதி மில்லின் மெயின் கேட்டிற்கு முன்னுல் உட்கார்ந்து மறியல் செய்ய ஆரம்பித்தார்கள்.

ஆறு தினங்களுக்குப் பிறகு 27-9-58 காலை சர்க்கார் முன்னிலையில் தொழிற்சங்க பிரதிநிதிகளும், பாரதி மில் முதலாளியும் பேச்சுவார்த்தை நடத்தி கீழ்கண்ட முடிவுக்கு வந்தார்கள்.

உடனடியாக தறிப்பகுதியை ஆரம்பித்து பூரணமாக நடத்துவதெனவும், இன்னும் இரண்டொரு மாதங்களில பட்டுப பஞ்சியைப் போட்டு காடிப்பகுதியை நடத்துவதற்கு எல்லா முயற்சியும் எடுத்துக் கொள்வதெனவும் தற் சமயம் தொழிலாளர் அனைவரும் பட்டினிகிடப்பதால் எல்லா தொழிலாளர்களுக்கும் 11-10-58-ல் காடிப் பகுதி தொழிலாளர்களுக்கும் 15-10.58-ல் தறிப் பகுதி தொழிலாளர்களுக்கும் 20 ரூபாய் அட்வான்சாக கொடுப்பதெனவும், மில் நிர்வாகத்தின் சார்பாக திரு. அய்யாவு அவர்கள் போலீஸ் சூப்பரின்டெண்ட் காரியாலயத்தில் ஏற்றுக் கொண்டார். மறியல் போராட்டம் வாபஸ் வாங்கப்பட்டது என்பதை அனைவருக்கும் தெரிவித்துக் கொள்வதோடு போராட்டக் காலத்தில் எங்களுக்கு சகலவித ஆதரவும் கொடுத்த அனைவருக்கும் எங்கள் நன்றியை தெரிவித்துக் கொள்கிறோம் என்று சங்கச் செயலாளர் தெரிவிக்கிறார்.

# முக்ய அபிவிருத்தித் திட்டங்களை குறைக்கவேண்டிய அவசியமில்லை

## கஷ்டங்களை சமாளிக்க முடியும்

### கேரள கவர்னர் நம்பிக்கை

குண்டரா (கொல்லம்), செப் 29— இன்று நாட்டை எதிர்நோக்கியுள்ள கஷ்டங்கள் சமாளிக்க முடியாதவை என்றும், ஆகவே நம்முடைய முக்ய அபிவிருத்தித் திட்டங்களை வெட்டிக் குறைக்க வேண்டியதவசியமென்று கூறுபவர்களின் கருத்தைத் தன்னுல் ஒத்துக்கொள்ள முடியவில்லை என்று கேரள கவர்னர் திரு. பி. ராமகிருஷ்ணராவ், நேற்று இங்கு அலுமினியம் தொழிற்சாலைக் கம்பெனியின் மூன்று மாடிகளுள்ள நிர்வாகக் கட்டிடத்தைத் திறந்து வைத்துப் பேசுகையில் குறிப்பிட்டார்.

"நம்முடைய ஆதாரங்களை (வசதிகளை) எல்லாம் சரியாக ஒழுங்குபடுத்தி ஒருமுகப்படுத்தினுல், நம்முடைய லட்சியத்தை அடைவதற்குப் போதிய சந்தர்ப்பம் இருக்கிறது என்றும் அவர் குறிப்பிட்டார்.

நிதி பற்றிய கஷ்டங்கள் தொழில் நிபுணர்கள் பற்றாக்குறை போன்ற பல இடர்பாடுகள் இருக்கின்றன என்பது உண்மையே. ஆயினும், நம்முடைய தேவைகள் அதிகரிக்கும்போது, வசதிகளும் அதிகரிக்கவே செய்கின்றன. நிதியைப் பொறுத்த மட்டிலும், சிறிது வெளிநாட்டு உதவியைப் பெறவேண்டியது அவசியமாகியுள்ளது. பெரிய அளவுக்கு அந்த உதவி நமக்குக் கிடைக்கவும் செய்கிறது. உலகத்திலுள்ள சகல நாடுகளும்— அவை எந்த முகாமைச் சேர்ந்திருந்த போதிலும்—இந்தியாவுக்கு நிதி உதவியும், தொழில் நுணுக்க உதவியும் அளிக்க ஆவலாயுள்ளன என்றும் குறிப்பிட்டார்.

#### சர்க்கார் கொள்கை

நாட்டின் அபிவிருத்தியில் தனியார் தொழில் துறையின் பங்கைப்பற்றிக் குறிப்பிட்டு, தொழில்கள் பூராவையும் சர்க்கார் ஏகபோகமாக நடத்துவதற்கு விரும்பவில்லை. அதே சமயத்தில் தனியார் தொழில்களின் முன்னேற்றப் பாதையில் முட்டுக்கட்டை போடவும் சர்க்கார் விரும்பவில்லை, என்றும் திரு. ராமகிருஷ்ணராவ் குறிப்பிட்டார்.

#### தொழிலுறவு

முதலாளி – தொழிலாளி உறவைப் பொறுத்தமட்டிலும், தொழில் புரட்சி ஏற்படும் மாறுதல் காலகட்டத்தில் உலகத்தின் எல்லா நாடுகளும் சில இடர்ப்பாடுகளைச் சமாளிக்க வேண்டியிருந்தது. தொழிலாளியும் முதலாளியும் தங்களுடைய கடமைகளையும், உரிமைகளையும் சரியான திருஷ்டியுடன் பார்ப்பார்களேயானுல் இந்த இடர்ப்பாடுகளெல்லாம் மறைந்துவிடும், என்றும் அவர் குறிப்பிட்டார்.

இது, சம்பந்தமாக, அலுமினியத்தொழிற்சாலை தொழிலாளர்களும், முதலாளிகளும் 4 ஆண்டு தொழில் சமரச ஒப்பந்தம் செய்துகொண்டுள்ளதை கேரள கவர்னர் பாராட்டினார்.

## நாகையில் அரிசி, விறகு, தேங்காய் விலை ஏற்றம்

நாகை, செப். 25— நாகை சப்-கலெக்டருக்கு கம்யூனிஸ்ட் கட்சி, ரோலிங்மில்தொழிலாளர், சுருட்டுத் தொழிலாளர், கப்பல் கூலித் தொழிலாளர்களின் சார்பாக கீழ்வரும் மகஜர் கொடுக்கப்பட்டது.

நாகை நகரத்தில் மக்களின் அன்றாடத் தேவைப் பொருள்களான அரிசி, விறகு, தேங்காய் எண்ணெய் முதல் சகல பொருள்களும் நாளுக்கு நாள் விலை ஏறிக்கொண்டு போவதால் ஏழைஎளிய நடுத்தர மக்கள் தினம் தினம் பாதிக்கப்பட்டு அவதியுறுகிறார்கள். இன்று அரிசி விலை சின்னபடி எட்டு அணுவாகவும், விறகு மணு 12 அணுவாகவும், தேங்காய் எண்ணெய் சேர் 12அணுவாகவும் விற்கப்படுகிறதுஎன்பதை தங்கள் கவனத்திற்கு கொண்டு வருவதுடன், உயர்திரு கலெக்டர் அவர்களும், சர்க்காரும் அகவிலை உயர்வைகட்டுப்படுத்தி,குறைந்த விலையில் அரிசி, விறகு, தேங்காய் எண்ணெய், கீத்து இவைகளை வினியோகிக்க நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்வதுடன் உடனடியாக நியாயவிலை கடைகளை திறப்பதன் மூலமாக குறைந்த விலையில் அரிசி வினியோகிக்கும்படியாக கேட்டுக்கொள்கிறோம் என்று வற்புறுத்தப்பட்டது.



# கம்யூனிஸ்ட் கட்சி கிளை மகாநாடுகள்

### சென்னை 11-வது வட்டம்

சென்ற மாதம் 27-ந்தேதி 11-வது வட்டக்கிளை மாநாடு ஆ. பார்த்தசாரதி தலைமையில் நடைபெற்றது. செயலாளர் முகுந்தன் அறிக்கை சமர்ப்பித்தார். பொருளாளர் பஞ்சாட்சரம் கணக்குகளை சமர்ப்பித்தார். கபூர் அவர்கள் விசேஷ உரை ஆற்றினார். எம் முகுந்தன் செயலாளராகவும், பி எல். ராமமூர்த்தி உதவிச் செயலாளராகவும், வி. ஆர். பஞ்சாட்சரம் பொருளாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### 22-வது வட்டக்கிளை

இந்தக் கிளையின் மாநாடு 30-8-58ல் வி. என். சண்முகம் தலைமையில் நடைபெற்றது. ஹரிபட் தற்கால அரசியல் நிலைபற்றி விளக்கியபின் தியாகிகளுக்கு அஞ்சலி, அரசியல் கைதிகள் விடுதலை முதலிய மற்றத் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டது. செயலாளர் மு. கண்ணன் அறிக்கை சமர்ப்பித்தார், புதிய நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### 19-வது வட்டக்கிளை

கடந்த மாதம் 16ந்தேதி சந்திரன் தலைமையில் மாநாடு நடைபெற்றது. அமிரதசரஸ் முடிவுகளை கஜபதி விளக்கினார். சாமிநாதன் குருசாமி இருவரும் முறையே செயலாளர் உதவிச் செயலாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### 43 வது வட்டக்கிளை

43-வது கிளையின் பேரவைக் கூட்டம் 24-8-58-ல் நடைபெற்றது. செயலாளர் ராஜாராம் அறிக்கை சமர்ப்பித்தார். ஆர். ராஜாராம் செயலாளராகவும், டி. தங்கராஜ் பொருளாளராகவும் மீண்டும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### மேற்கு ஏரியா மாநாடு

சென்னை நகர கம்யூனிஸ்ட் கட்சியின் மேற்கு ஏரியா மாநாடு 16-9-58ல் ஐவர் கொண்ட தலைமைக் குழுவின் கீழ் நடைபெற்றது. 68 பேர் பிரதிநிதிகளாகக் கலந்துகொண்டனர்.

15 பேர் கொண்டபுதியஏரியாக் கமிட்டி அமைக்கப்பட்டது. எம். ஆர். குரு தேவபாண்டியன், எஸ். எஸ். ராஜன், பவுரிலால் முறையே செயலாளர், உதவிச் செயலாளர், பொருளாளராகத் தேர்ந்தெடுக்கப் பட்டனர். ஜில்லா மாநாட்டுக்கு 17 பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

நம்மாள்வார்பேட்டை புதிய பூங்காவில் பாரதி சிலை அமைக்கக் கோரியும், காசரோக ஆஸ்பத்திரியை மாற்றக் கோரியும், இதர பல ஸ்தல தீர்மானங்களை நிறைவேற்றினார்கள்.

### திருவல்லிக்கேணி ஏரியா

31-8-58-ல் திருவல்லிக்கேணி ஏரியாக் கட்சிக்கிளை மாநாடு நடைபெற்றது, கா. மு. கணேசன் கட்சி ஸ்தாபனம், அமிருதசரஸ் மாநாடு இவை பற்றிப் பேசினார். ஜகந்நாதன், சுந்தர மூர்த்தி இருவரும் முறையே செயலாளராகவும் உதவிச் செயலாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். ஸ்தலப் பிரச்சினைகள் பற்றிப் பல முடிவுகள் எடுக்கப்பட்டன.

### 3-வது வட்டக்கிளை

இந்தக் கமிட்டியின் பேரவைக் கூட்டம் 24-8-58-ல் இருதயநாதன் தலைமையில் நடைபெற்றது. தியாகிகளுக்கு வணக்கம் செலுத்திய பின் பரமேச்வரன் அமிருதசரஸ் மாநாடு பற்றி விளக்கினார். செயலாளரும், பொருளாளரும் தத்தம் அறிக்கைகளை சமர்ப்பித்தார்கள். எம். வரதன் செயலாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

### 19-வது வட்டக்கிளை

15-8-58-ந் தேதி 19-வது வட்டசூளைக் கிளை மாநாடு நடைபெற்றது. தி. பக்தவத்சலம் கிளைச் செயலாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். 19 பேர் ஏரியா மாநாட்டுப் பிரதிநிதிகளாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### திருப்பூர்

4-9-58-ல் அறுப்பர் பாளையம் ஜீவா படிப்பகத்தில் நடைபெற்ற கிளைப் பேரவையில் எம். மாரப்பன் தலைமை வகித்தார். செயலாளராக என். ராமசாமியும், உதவி செயலாளராக கே. கிருஷ்ணசாமியும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

30-8-58-ல் கிழக்கு பிரதேசக் கிளை மாநாடு எம். ரங்கசாமி தலைமையில் நடைபெற்றது. எம். ராமசாமி அறிக்கை சமர்ப்பித்தார். செயலாளராக என். ரங்கசாமியும் உதவிச் செயலாளராக எம். கிருஷ்ணசாமியும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

நெறிப்பரச்சல் கிளை மாநாடு 6-9-58ல் நல்லாத்துப் பாளையத்தில் கருப்புசாமி தலைமையில் நடைபெற்றது. கட்சி வேலைகள் பற்றி மாரப்பன் விளக்கினார். நெறிப்பரச்சல் நல்லாத்துப் பாளையம் இரு கிளைகளாக்கி முறையே பி. வெங்கடாசலம், சி. கருப்புசாமி, கே. ராமசாமி, என். ரங்கசாமி இவர்கள் செயலாளர் உதவிச் செயலாளர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

### திருச்சி பீம நகர்

திருச்சி பீமநகர் கட்சிக் கிளை மகாநாடு 30-8-58 ல் எம். கிருபாபுரி தலைமையில் நடைபெற்றது. அறிக்கை சமர்ப்பிக்கப்பெற்று விவாதம் நடைபெற்றது. என். ராஜேந்திரன் செயலாளராகவும், எம். ஏ. கபூர் பொருளாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### முக்காணி

கட்சிக் கிளை மாநாடு 3-9-58 ல் நயினார் குலசேகரனால் தொடங்கி வைக்கப்பட்டது வி. சொக்கலிங்கம் தலைமை வகித்தார். செயலாளராக ஆ. சுப்பையாவும், உதவிச் செயலாளராக வி. சொக்கலிங்கமும், பொருளாளராக இசக்கியும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### ஜெயமங்கலம்

இந்தக் கிளையின் மாநாடு கே. செல்லையா தலைமையில் 16-8-58ல் நடைபெற்றது. எஸ். பழனியப்பன் செயலாளராகவும், எம் தாண்டவன் உதவிச் செயலாளராகவும், அ. சன்னாசி பொக்கிஷதாராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

### சத்திரப்பட்டி

24-8-58-ல் சத்திரப்பட்டிகட்சி கிளை மகாநாடு நடந்தது. ஏ. சீனிவாசன் கட்சி ஸ்தாபன வேலை பற்றி அறிக்கை சமர்ப்பித்தார். புத்தாண்டிற்கு எஸ். சங்கிலக்காளை செயலாளராகவும், ஏ. மாடசாமி துணை செயலாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### சிவலிங்கபுரம்

25-8-58-ல் சிவலிங்கபுரம் கட்சி கிளை மகாநாடு கூடி, ஜே. சீனிவாசனை செயலாளராகவும், ச. கந்தசாமியை துணை செயலாளராகவும் தேர்ந்தெடுத்தது.

### தொம்பக்குளம்

26-8-58-ல் தொம்பக்குளம் கட்சி கிளை மகாநாடு ச. கிருஷ்ணசாமி தலைமையில் நடந்தது. அய்யலுசாமி செயலாளராகவும், ஆ. கிருஷ்ணசாமி துணை செயலாளராகவும், துரைராஜ் பொருளாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### பள்ளிபாளையம்

1-8-58-ல் பள்ளிப் பாளையம் கட்சி கிளை மகாநாடு எஸ். ரங்கையன் தலைமையில் கூடிற்று. கே. ராமசாமி செயலாளராகவும், ஏ. அர்த்தனாரி துணை செயலாளராகவும், கே. கந்தசாமி பொருளாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### கண்ணம்பாளையம்

சூலூர் பிர்க்கா கமிட்டி கண்ணம்பாளையம் கட்சி கிளை மகாநாடு பள்ளப்பாளையம், நடுப்பாளையம் குழு உள்பட சூலூர் பிர்க்கா கமிட்டி செயலாளர் சூர. தங்கவேலு தலைமையில் நடந்தது. கே. ஏ. நடராஜன் ஆண்டு அறிக்கை சமர்ப்பித்தார். புத்தாண்டிற்கு செயலாளராக கே. ஏ. நடராஜன், துணைச் செயலாளராக கே. என். கந்தசாமி தேர்ந்தெடுக்கப்பட்டனர். இவ்விருவருடன் செயற்குழு உறுப்பினராக கே. ஆர். ராமசாமி, கே. ஜி. ராமசாமி, கே. எம். ராகசாமி, கே. கே. சுப்பையன், கே. எஸ். முருகையன், கே பி. சின்னையன், கே. ஏ. வேலாயுதசாமி, கே. கே. மாரப்பன், கே. என். ராயப்பன் இவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### பழனி தாலுகா மகாநாடு

பழனி தாலுகா கட்சி மகாநாடு ஆக 26, 27 தேதிகளில் நடந்தது. ஜில்லா, தாலுகா கட்சி அலுவலக கட்டிட நிதிக்கு ரூ. 5000 வசூலிப்பதென்று முடிவு செய்யப்பட்டது புத்தாண்டிற்கு வி. ஏ. கருப்புசாமியை காரியதரிசியாகவும், 11 உறுப்பினர்கொண்ட தாலுகா கமிட்டியையும், ஜில்லா மகாநாட்டிற்கு 17 பிரதிநிதிகளையும் தேர்ந்தெடுத்தனர்.

பொதுக்கூட்டம் கே. பெரியசாமி தலைமையில் நடந்தது. வி. கே. கருப்புசாமியின் பிரேரணை பேரில், பழனி நகர குடி தண்ணீர் திட்டத்தை உடனடியாக நிறைவேற்ற வற்புறுத்தும் தீர்மானம் நிறைவேறியது.

### நேமத்தான்பட்டி

31-8-58-ல் நேமத்தான் பட்டியில் கட்சிகிளை அமைக்கப்பட்டது. ராம. கருப்பன் செயலாளராகவும் சோ. காளிமுத்து துணை செயலாளராகவும் ராம். கருப்பையா பொருளாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். திருமயம் தாலுகா அரண்மனைப் பட்டி விவசாயிகள் சங்கச் செயலாளர் ஆர். ஹெச். நாதனுக்கு வரவேற்பு நடத்தது.

### ஒருத்தட்டு

ஒருத்தட்டுக் கட்சிக் கிளை மகாநாடு 22-8.58-ல் நடந்தது. புத்தாண்டுக்கு ஆர். சேதுலிங்கம் செயலாளராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார். தாலுகா மகாநாட்டிற்கு சேதுலிங்கம், ஆண்டவர், எம். எஸ். கே. சுப்பையா மூவரும் பிரதிநிதிகள்.

### அலங்காநல்லூர்

அலங்காநல்லூர் கட்சிக்கிளை மாநாட்டில் தாலுகா கமிட்டி செயலாளர் உலகப்பா கம்யூனிஸத்தின் வெற்றிமுரசு பற்றி விளக்கினார். முத்துசாமி, ராமானுஜம், வரதராஜன், ரெங்கசாமி ஆகியநால்வரும் தாலுகா மாநாட்டிற்குப் பிரதிநிதிகளாத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### மேலப்பட்ட மங்களம்

நேற்று மேலப்பட்ட மங்களம் கட்சிக் கிளை மாநாடு கூத்தக்குடி ச. சண்முகம் தலைமையில் நடந்தது. தலைவர் அமிர்தசரஸ் முடிவுகளை விளக்கிப் பேசினார் காரியதரிசி எஸ். கோட்டை அறிக்கை சமர்ப்பித்தார். பிறகு தாலுகா மாநாட்டிற்குப் பிரதிநிதிகளும், காரியதரிசியாக எஸ். கோட்டையும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

# அமெரிக்கா தூண்டும் போரை ஆதரியோம்

## அமெரிக்காவைவிட 20 லட்சம் டன் அதிக கோதுமை சீனவில் உற்பத்தி

### இவ்வாண்டின் முதல் 6 மாதங்களில் பிரம்மாண்ட சாதனைகள்

(டா ஜோ-ரின்)

பொதுவாக புள்ளி விபரங்கள் யாவுமே'சப்'பென்றிருப்பதுண்டு. ஆனால்இவ்வாண்டின் முதல் ஆறு மாதங்களில் சீனவின் பொருளாதாரச்சாதனைகளைக்குறிக்கும் விபரங்கள், இதற்கு விதிவிலக்கு எனலாம். சீன அரசாங்கப் புள்ளி விபரக் குழுவினர் சமீபத்தில் வெளியிட்டுள்ள இவ்விபரங்கள் 60 கோடி சீன மக்கள் ஆறுமாத காலத்தில் சாதித்துள்ள பிரமாத வெற்றிகளை அழகுபட எடுத்துரைக்கும் தீஞ்சுவைக் கவிதைகளைப்போல ஒலிக்கின்றன.

இவ்வாண்டின் முதல் ஆறு மாதங்களில் சீனவின் பொருளாதாரம் பிரமாத வேகத்தில் வளர்ந்தோங்கியது. சென்ற ஆண்டு இதே காலத்தில் இயந்திரத் தொழில்கள் கண்ட உற்பத்தியைவிட, இவ்வாண்டில் இயந்திரத் தொழில்களின் உற்பத்தியின் மதிப்பு 34 சதவிகிதம் அதிகமாகும். கோடை உணவுப் பயிர்களின் அபரிமித அறுவடையின் விளைவாயும் முன்பருவ நெற்பயிரும், வசந்தபருவ கோதுமைப் பயிரும் நல்ல கண்டுமுதல் அளித்துள்ளதனாலும் சென்ற ஆண்டைவிட இவ்வாண்டு 4 கோடியே 20 லட்சம் டன் தானியங்கள் அதிகமாகக் கிடைக்கும். இது முதல் ஐந்தாண்டுத் திட்ட காலத்தின் (1953–1957), மொத்த தானிய அறுவடையைவிட அதிகமாகும்.

#### இயந்திர மயம்

சுமார் 1000 பெரிய, நடுத்தர இயந்திரத் தொழில் நிலையங்கள் சீனவில் நிறுவப்பட்டுள்ளன. இதன்றி, கூட்டுறவுக் கழகங்களால் நடத்தப்படும் 30 லட்சம் இயந்திரத் தொழில் நிறுவனங்களும், சிறு நகரங்கள், தாலுகாக்கள், விசேஷநிர்வாகப்பிராந்தியங்கள்,மாகாணங்கள், முனிசிபாலிடிகளால் நிறுவப்பெற்றுள்ள 3 லட்சத்திற்கு அதிகமான தொழில் நிலையங்களும் தேசத்தின் இயந்திரத் தொழில் உற்பத்தி சக்தியை வெகுவாகப் பெருக்கியுள்ளன.

பூர்வாங்கப் புள்ளிவிபரங்களின் படி (இன்னமும் பூர்த்தியாகாத விபரங்களின்படி), இவ்வாண்டின் முதல் ஆறு மாதங்களில் 900-க்கு மேற்பட்ட சிறிய ஊதுலைகள் உள்பட 11,000-க்கு மேற்பட்ட இரும்பு உற்பத்தி செய்யும் உலைகளும், 20,000 சிறிய மின்சார நிலையங்களும், 10,000-க்கு மேற்பட்ட சிமெண்டு சூளைகளும், 8,000-க்கு மேற்பட்ட சிறிய நிலக்கரிச் சுரங்கங்களும் நிறுவப்பட்டுள்ளன.

பெரும்பாலான இயந்திர உற்பத்திப் பண்டங்களின் உற்பத்தி சென்ற ஆண்டின் முதல் ஆறு மாதங்களைவிட இவ்வாண்டின் முதல் ஆறு மாதங்களில் பெருமளவிற்கு அதிகரித்துள்ளது.

#### ஊழியர் பெருக்கம்

35 முக்கிய இயந்திர உற்பத்திப் பண்டங்களை எடுத்துக்கொண்டால், அவற்றில் மின்சார உற்பத்தி 30 சதவிகிதமும், நிலக்கரி 46 சதவிகிதமும், குரூடு ஆயில் (எண்ணெய்) 32 சதவிகிதமும், தேனிரும்பு 33 சதவிகிதமும், எஃகு 26 சதவிகிதமும், நைட்ரஜன் உரம் 65 சதவிகிதமும், இயந்திரக் கருவிகள் சுமார் 100 சதவிகிதமும், மின்சார மோட்டார்கள் 100 சதவிகிதத்திற்குக் கூடுதலாகவும் அதிகரித்துள்ளன.

இயந்திரத் தொழில் நிலையங்களில் பணியாற்றும் தொழிலாளர்கள், ஊழியர்களின் எண்ணிக்கை சென்ற ஆண்டின் இறுதியைவிட இவ்வாண்டு ஜூன் மாத இறுதியில் 9,90,000 அதிகரித்துள்ளது.

#### உணவு உற்பத்தி

கோடை உணவுப் பயிர்களின் கண்டுமுதல் 5 கோடியே 5 லட்சம் டன்களாக அதிகரிக்கும் என்று மதிப்பிட்டிருக்கிறார்கள். இது, சென்ற ஆண்டைவிட 2 கோடியே 6 லட்சத்து 50 ஆயிரம் டன் அதிகமாகும். அதாவது 69 சதவிகிதம் அதிகம். இதுவரை கோடை உணவுப் பயிர்களின் கண்டுமுதல் இந்த அளவுக்கு எப்பொழுதுமேஅதிகரித்ததில்லை. மாரிக்கால கோதுமைப் பயிர்களின் கண்டு முதல் 3 கோடியே 44 லட்சத்து 50 ஆயிரம் டன்னாக உயரும் என்று மதிப்பிட்டிருக்கிறார்கள். இது சென்ற ஆண்டைவிட 1 கோடியே 39 லட்சத்து 50 ஆயிரம் டன் அதிகமாகும். அதாவது 68 சதவிகிதம் அதிகமாகும்.

முன்பருவ நெற் பயிர் 15 கோடியே 60 லட்சம் பரப்புடைய பிரதேசத்தில் சாகுபடி செய்துள்ளனர். இது சென்ற ஆண்டைப்பார்க்கிலும் மோ. 3 கோடியே 80 லட்சம் அதிகமாகும். கண்டுமுதல் 4 கோடி டன் அதிகமாக இருக்கும் என்று மதிப்பிட்டுள்ளார்கள். சென்ற ஆண்டில் இதே காலத்தில் கிடைத்த அறுவடையைவிட இது இருமடங்காகும். வசந்த காலத்தின் கோதுமை அறுவடை 45 லட்சம் டன்னாக இருக்கும் என்று மதிப்பிட்டுள்ளார்கள். இது, சென்ற ஆண்டைவிட 15 லட்சம் டன் அதிகமாகும். இவ்வாண்டு சீனவின் கோதுமை அறுவடை, அமெரிக்காவைவிட குறைந்தபட்சம் 20 லட்சம் டன் அதிகமாக இருக்கும்.

1957 அக்டோபர் முதல் இவ்வாண்டுஜூன்மாதம்முடியமொத்தம் 42 கோடி மோ. நிலத்திற்கு பாசன வசதிகள் செய்யப்பட்டுள்ளன, இது கடந்த எட்டு வருட காலத்தின் பாசனவசதி பெற்ற நிலப்பரப்பைப்போல் ஏறத்தாழ இருமடங்காகும். மேலும் இது, சீன விடுதலை அடைவதற்கு முன்பு பல்லாயிரம் ஆண்டுகளாக இருந்துவந்த பாசன வசதிகளைவிட 78 சதவிகிதம் அதிகமாகும்.

#### கல்வி சிறக்க

இவ்வாண்டின் முதல் ஆறு மாதங்களில், 640 கிலோமீட்டர் நீளத்திற்கு ரயில் பாதைகளும், 3164 கிலோமீட்டர் நீளத்திற்கு நெடுஞ்சாலைகளும் அமைக்கப் பெற்றுள்ளன.

பூர்த்தியாகாத தகவல்களின்படி, 1240 தாலூகாக்கள், பள்ளி வயது சிறுவர்கள் அனைவருக்கும் ஆரம்பக் கல்வி வசதியை அளித்துள்ளன. மக்கள் நடத்தும் எலிமெண்டரி பள்ளிக்கூடங்களின் எண்ணிக்கை 68,000 ஆக உயர்ந்துள்ளது. மேலும், ஸ்தல அதிகாரிகள் புதிதாக 400க்கு மேற்பட்ட உயர்தரக் கல்வி நிலயங்களைநிறுவியுள்ளனர். தற்குறித்தனத்தை ஒழித்துக்கட்டுவதற்கான இயக்கம் விரிவாக்கப்பட்டு, 9 கோடிக்கு மேற்பட்ட மக்கள் முதியோர் கல்வி வகுப்புகளுக்குச் சென்று வருகின்றனர். 444 தாலூகாக்களில் தற்குறித்தனம் அனேகமாக ஒழிக்கப்பட்டுள்ளது பூர்த்தியாகாத தகவல்களின்படி. இவ்வாண்டின் முதல் ஆறு மாதங்களில், கிராமப் புறங்களில் 2,500க்கு மேற்பட்ட ஆஸ்பத்திரிகள் அமைக்கப்பட்டுள்ளன.

## உ. பி. பி. சோ. கட்சி உணவு போராட்டம் வாபஸ்

லட்சுமண்புரி, செப். 29—

உத்திரப் பிரதேச பிரஜா சோஷலிஸ்ட் கட்சியின் கிளர்ச்சி கமிட்டி, செப்டம்பர் 5ந்தேதியன்று தங்கள் கட்சியால் ஆரம்பிக்கப்பட்ட உணவுக் கிளர்ச்சியை இன்று முதல் நிறுத்திவைத்தது.

## மார்க்கெட் நிலவரம்

சென்னை, செப். 30—

| | | |
|---|---|---|
| சவரன் | ரூ. | 72—8—0 |
| தங்கம் (ரெடி) | ரூ. | 108—8—0 |
| மூசை தங்கம் | ரூ. | 106—8—0 |
| வெள்ளி 100 தோலா | | 190—0—0 |
| வெள்ளி 1 ரூ. எடை | | 1—15—0 |

**மணிலா பயறு**

531 ராத்தல் கொண்ட பாரம் (விற்பனைவரி உட்பட) கோடை சரக்கு 1-க்கு ரூ. 195-00

**மணிலா எண்ணெய்**

500 ரா. கொண்ட பாரம் 1-க்கு எக்ஸ்பெல்லர் ரெடி மதராஸ் டெலிவரி அளவு 3%FFA (மொத்த விலை)

| | |
|---|---|
| ரெடி | 352-00 |
| அக்டோபர் | 346-00 |
| நவம்பர் | 319-00 |

**விளக்கெண்ணெய்**

(500 ரா. பாரம் 1-க்கு) மதராஸ் டெலிவரி 330-00

சேலம் "தாமரை அன்னம்" 26-50

**தேங்காய் எண்ணெய்**

(37½ ரா. டின் 1க்கு)

| | |
|---|---|
| எம். எஸ். மார்க்கு | 41-00 |
| அம்பு மார்க் | 40-00 |
| ராஜ | 40-00 |

**சர்க்கரை**

2 அந்தர் மூட்டை 1க்கு கெட் விலைகள்

| | |
|---|---|
| ஏடூரு | 105-31 |
| பித்தாபுரம் | 105-06 |

## சட்டசபையில் கல்யாணசுந்தரம் சத்தியாக்கிரஹம்

### கை ஏர் வாரம், மாட்டு வாரம் மசோதாவை உடனே சபைமுன் கொண்டுவர வற்புறுத்தல்

சென்னை, செப். 29—

சென்னை சட்டசபையில் இன்று கொண்டுவரப்படுவதாக அறிவிக்கப்பட்டிருந்தபடி திருச்சிராப்பள்ளி கை ஏர் வாரம், மாட்டு வாரம் மசோதா (1958) மாலை 5 மணிவரைக் கொண்டுவரப்படவில்லை. அதுபற்றிய அரசாங்கத்தின் கருத்துதான் என்ன என்று எம். கல்யாணசுந்தரம் அறிய விரும்பினர். நாளைக்காலை இது பற்றிக் கூறப்படும் என்று அமைச்சர் எம். ஏ. மாணிக்கவேலு கூறினர்.

இதற்குள் சபை கலைந்ததாக அறிவிக்கப்பட்டது. நாளைக் காலையிலேயே இம்மசோதா விவாதத்துக்கு எடுத்துக் கொள்ளப்படும் என்ற உறுதி அரசாங்கத்தின் சார்பாக தரப்படாதது எதிர்க்கட்சியினருக்கு மிகுந்த வருத்தத்தை அளித்தது. கை ஏர்வாரம், மாட்டு வாரம் மசோதா நாளைக் காலை சபைமுன் கொண்டுவரப்படும் என்ற உறுதியை அரசாங்கத்திடமிருந்து பெறுவதற்காக எம். கல்யாணசுந்தரம் சபையிலுள்ள தன் இடத்திலிருந்து எழுந்துவர மறுத்துவிட்டார்.

இதையொட்டி அரசாங்க செக்ரடேரியட் அலுவலக முழுவதும் ஒரே பரபரப்பு ஏற்பட்டது. வெளியே சென்றுகொண்டிருந்த பத்திரிகை நிருபர்களும் கவுன்சில் கூட்டத்தில் கலந்துகொண்டிருந்த உறுப்பினர்களும் இதில் ஆவல் காட்டத் தொடங்கினர். சென்னை சட்டசபையின் வரலாற்றிலேயே இது மாதிரி நிகழ்ச்சி இதுவே முதல் தடவை என வயதான சட்டசபை அதிகாரிகள் கூறினர்.

இச் சத்தியாக்கிரஹம் சுமார் 70 நிமிஷங்கள் நீடித்தது. இதற்கிடையே சட்டசபையின் காரியதரிசியும் சபாநாயகரிடம் நிலைமையை அறிவித்தனர்.

என். கே. பழனிச்சாமி, கே. சட்டசபைக் காரியதரிசி, வி. கே. கோதண்டராமன் ஆகியோர் முன்னிலையில், இம் மசோதா நாளைக்கு நிச்சயமாகச் சபைமுன் கொண்டுவரப்படும் என்றும் வேண்டுமானால் அதிக நேரம் உட்கார்ந்து தயாரென்றும் எனவே கல்யாணசுந்தரம் சத்தியாக்கிரஹத்தை உடனடியாக நிறுத்திவிட வேண்டுமென்றும் ஏனெனில் இந்த நிகழ்ச்சி தன் நற்பெயர் சம்பந்தப்பட்டது என்றும் சபாநாயகர் மிகவும் வேண்டிக் கொண்டதன் பேரில் கல்யாணசுந்தரம் தன் இடத்தைவிட்டு எழுந்து வந்தார்.

## டிகாலே திட்டத்தை கினியா நிராகரித்தது!

### மேற்கு ஆப்பிரிக்க மக்களின் சுதந்திரச் சங்கநாதம்

பாரிஸ், செப். 29—

பிரான்சின் சரித்திரத்திலேயே ஒரு முதலாவதான சம்பவமாக பிரெஞ்சு மேற்கு ஆப்பிரிக்காவில் உள்ள கினியா டிகாலேயின் புதிய அரசியல் சட்டத்தை நிராகரித்துவிட்டது.

கினியா என்பது மேற்கு ஆப்பிரிக்காவிலுள்ள பிரெஞ்சு ஆதிக்கத்திலுள்ள ஒரு நாடு. இதன் ஜனத்தொகை சுமார் 25 லட்சம் ஆகும்.

டிகாலேயின் அரசியல் சட்டப்படி ஒரு பகுதி எதிர்த்து வாக்களித்தால் அது பிரெஞ்சு மேற்கு ஆப்பிரிக்காவின் ஒரு பகுதியாக இருக்க முடியாது. ஆகவே கினியா பிரெஞ்சு ஆதிக்கத்திலிருந்து பிரிவதாக முடிவு செய்யப்பட்டது என்று பிரெஞ்சு சர்க்கார் அறிவித்து விட்டது.

அதோடு இனி கினியாவுக்குப் பிரெஞ்சு பொருளாதார, நிர்வாக உதவி கிடையாது என்றும், அங்குள்ள பிரெஞ்சு அதிகாரிகள் வாபஸ் பெறப்படுவார்கள் என்றும் அறிவிக்கப்பட்டு விட்டது. இது சம்பந்தமாக ஒரு அதிகாரப்பூர்வமான அறிவிப்பை பிரெஞ்சு மேற்கு ஆப்பிரிக்காவில் உள்ள நிர்வாக இன்ஸ்பெக்டர் ஜெனரலான ரிஸ்டுவி கினியா பிரதம மந்திரியிடம் இன்று சேர்ப்பித்தார்.

இதுநிற்க வாக்கெடுப்பு பற்றி கடைசியாக வந்தத் தகவல்படி கினியாவைத் தவிர ஏனைய பகுதிகளில் 79 25 சத விகிதத்தினர் டிகாலேயின் புதிய அரசியல் சட்டத்திற்கு ஆதரவாக ஓட்டளித்துள்ளனர் என்று தெரிகிறது.

## குமாய், மட்சூவிலிருந்து சியாங் படைகள் வாபஸாக வேண்டும்

### ஐ. நா. சபையில் சீனவுக்கு இடந்தருக

### பிரிட்டிஷ் தொழிற்கட்சி மகாநாட்டில் தீர்மானம்

ஸ்கார்பரோ, (இங்கிலாந்து) செப். 29—

குமாய், மட்சு தீவுகள் சம்பந்தமாக அமெரிக்கா தூண்டும் யுத்தத்தை பிரிட்டன் ஆதரிக்கக்கூடாதென்றும், அத்தீவுகளிலிருந்து சியாங்கே ஷேக்கின் படைகள் வாபஸாக வேண்டுமென்றும், ஐ. நா. சபையில் மக்கள் சீனவுக்கு இடமளிக்கவேண்டுமென்றும், இன்று இங்கு கூடிய பிரிட்டிஷ் தொழிற்கட்சி மகாநாட்டில் ஏகமனதாக ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

பிரிட்டனில் ஆட்சி பீடத்திலுள்ள டோரிக் கட்சியினர் தங்கள் காலனி ஆதிக்கத்தை நீடித்துக்கொண்டு போவதைத் தடுத்து நிறுத்துவதற்கு சோஷலிஸ்ட் இயக்கம் தவறுமேயானால் காலனி மக்கள் தாங்களாகவே அதைச் செய்வார்கள் என்று பிரிட்டிஷ் தொழிற் கட்சியின் மகாநாட்டுக்குத் தலைமை வகித்த மேற்படி கட்சியின் தலைவர் டாம்ட்ரிபெர்க், தன்னுடைய தலைமை உரையில் குறிப்பிட்டார். அவர் மேலும் பேசுகையில்:

"கன்சர்வேடிவ் சர்க்கார் சூயஸ் கால்வாய்மீது படையெடுத்தது இன்னும் இதர இடங்களில் அது தலையிட்டது ஆகிய நடவடிக்கைகள் மிகவும் ஆவேசம் பொருந்திய ஏகாதிபத்திய எதிர்ப்பாளன் செய்வதைக் காட்டிலும் அதிகமாக காமன்வெல்த் ஒற்றுமையைக் குலுக்கி விட்டுள்ளன.

"அப்படியிருந்தும் அவர்கள் (பிரிட்டிஷ் ஆளும் கட்சியினர்) இன்னும் தங்களுடைய சாம்ராஜ்ய மென்னும் பழைய ஆதிக்க வெறியை விடாப்பிடியாகப் பிடித்துக்கொண்டிருக்கின்றனர்.

#### ஹிட்லரின் தத்துவமே

"டோரிக் கட்சியின் தத்துவம்—பார்வைக்கு கொஞ்சம் மென்மையாக அமுல் படுத்தப்படுவதாகத் தோன்றினாலும் நாஜிகளின் (ஹிட்லரின்) உலக ஆதிக்கத் தத்துவத்துடன் சாராம்சத்தில் வேறுபட்டதல்ல.

"தாங்கள் ஆளப்பிறந்த உயர்ந்த 'எஜமான இனம்'என்றே அவர்கள் உண்மையாகவே நம்புகிறார்கள். தங்களைவிடக் கீழானவர்கள் என்று சொல்லப்படும் நாடுகளின் பொருட்செல்வமும், அந்நாட்டு மக்களை வியர்வைசிந்த உழைக்கவைப்பதும் அவர்களுக்கு மிகவும் லாபகரமாக உள்ளன. இந்த நாட்டில் (காலனி நாடுகளுடன் ஒப்பிடும்போது) வாழ்க்கைத்தரம் உயர்வாக இருப்பதற்கும் அது ஒரு காரணமாக இருந்திருக்கிறது.

#### டோரிக் கட்சி போக்கு

"முன்பு தொழிற் கட்சியினரால் சாதிக்கப்பட்டுள்ள முன்னேற்றங்களை அழிப்பதற்கு டோரிக் கட்சியினரால் முடியாவிட்டாலும்கூட அவர்கள் இன்றும், ஒரு நூற்றாண்டுக்கு முன்னால் பிரிட்டிஷ் தொழிலாளிகளை எப்படி நடத்தினார்களோ, அப்படியே கடல் கடந்த பிரதேசங்களை நடத்தி வருகின்றனர்," என்றும் டாம்ட்ரிபெர்க் குற்றம் சாட்டினார்.

பிரிட்டனில் அண்மையில் நடந்த இனக் கலகங்களைக் கண்டித்தார்.

#### தொழிற்கட்சி வெல்லும்

அடுத்த பொதுத் தேர்தலில் தொழிற் கட்சியின் நிலவரத்தைப் பற்றிக் குறிப்பிடுகையில் "போராட்டம் மிகவும் கடுமையாக இருக்கும்; ஆயினும் தொழிற் கட்சி வெற்றி பெறும் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு" என்றார்.

#### தீர்மானம்

மகாநாட்டில் ஒரே ஒரு ஓட்டு மட்டும் எதிராகக் கிடைக்க, கீழ் வரும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது:

1. சீனவின் கரையோரத் தீவாகிய குமாயைக் காப்பாற்றுவதற்காக என்று தூண்டப்படும் யுத்தத்தை பிரிட்டன் ஆதரிக்கக் கூடாது. கரையோரத் தீவுகளிலிருந்து சியாங்கே ஷேக் படைகள் வாபஸ் பெறும்படி செய்வதின் மூலம் சமாதான பூர்வமாகப் பிரச்சினைக்குப் பைசல் காண்பதற்கு பிரிட்டன் வற்புறுத்தவேண்டும்.

2. ஐ. நா. சபையில் சீனவின் ஸ்தானம் சீன மக்கள் குடியரசுக்குப் போகவேண்டும்.

3. பார்மோசாவை தற்காலிகமாக ஐ. நா. நிர்வாகத்தின் கீழ் வைப்பதற்கு பேச்சுவார்த்தைகள் நடத்த வற்புறுத்த வேண்டும். பின்னால் பார்மோசா மக்களே தங்களுடைய எதிர்காலத்தை நிர்ணயித்துக்கொள்ள அனுமதிக்க வேண்டும்.

## பெய்ரூட்டில் வலதுசாரிகள் வாலாட்டம்

பெய்ரூட், செப். 29—

லெபனான் தலைநகரான பெய்ரூட்டில் வலதுசாரி பலாங்கிஸ்டுகள் துப்பாக்கிமுனையில் கடையடைப்பு நடத்த வர்த்தகப் பகுதி நோக்கி இன்று அதிகாலையில் சுட ஆரம்பித்தனர். உடனே டாங்கிகள் சகிதம் லெபனான் ராணுவம் முன்னேறி 4 மணிநேரம் சண்டை செய்து அவர்களை தடுத்துநிறுத்திற்று. ஒரு பலாங்கிஸ்டு கொல்லப்பட்டார். பலர் காயமடைந்தனர். (ராய்ட்டர்)

## அரபு லீகில் சேர குவெய்ட் விருப்பம்

கெய்ரோ, செப். 29—

அரபு லீகில் சேர பாரசீக வளைகுடா ராஜ்யமான குவாய்ட் விண்ணப்பித்துக்கொண்டுள்ளது. இது எண்ணெய் வளமிக்க ராஜ்யமாகும். குவாய்ட் சேருவதை அரபு லீக் மகிழ்ச்சியோடு வரவேற்றுள்ளது. (ராய்ட்டர்)

## திருச்சூர் உபதேர்தலில் காங்கிரஸ் படுதோல்வி

### கம்யூனிஸ்ட் ஆதரவாளர்கள் அமோக வெற்றி

### பாதுகாப்பு இல்லை என்று தேபர் 'பஜனை' பாடிய இடம்!

திருச்சூர், செப். 29—

திருச்சூர் நகரசபைக்கு இன்று நடைபெற்ற இரண்டு உபதேர்தல்களிலும் கம்யூனிஸ்ட் ஆதரவு பெற்ற அபேட்சகர்கள் அமோக வெற்றிபெற்றனர். இரண்டு தொகுதிகளிலும் காங்கிரஸ் அபேட்சகர்கள் படுதோல்வி அடைந்தனர். காங்கிரஸ் அபேட்சகர்களை பி. சோ., லீக் முதலிய கட்சிகள் ஆதரித்து மும்முரமாக வேலை செய்தன.

20-வது வார்டில் மரியில் கிருஷ்ணன்குட்டி நாயரும் 22வது வார்டில் கே. வி. மாதவனும் வெற்றி பெற்றனர்.

20-வது வார்டு ஸ்தானம் முன்பு காங்கிரஸிடம் இருந்தது.

இந்த உபதேர்தல் வெற்றி மிக முக்கியமாகக் கருதப்படுகிறது. ஏனென்றால் திருச்சூர் பகுதியில் தான் பாதுகாப்பற்ற நிலைமை இருப்பதாக தேபர் முதல் கேரள காங்கிரஸ்காரர்கள்வரை ஓயாது பிரச்சாரம் செய்துவந்தார்கள். அத்தகைய இடத்திலே காங்கிரஸ் படுதோல்வி அடைந்ததானது, கேரளத்தில் சட்டம் ஒழுங்கில்லை என்று அவர்கள் செய்து வந்த பிரச்சாரம் அவதூறானது என்பதை நிரூபித்துவிட்டது.

## ஏ. எஸ். கே. அய்யங்கார் அந்தோணிப்பிள்ளை மீது போலீஸ் வழக்கு

சென்னை, செப். 29—

ஜூன் 16ல் சென்னை ஹார்பர் பொது வேலைநிறுத்தத்தின்போது போலீஸ் துப்பாக்கிப்பிரயோகம் செய்து 6 தொழிலாளர்களைக் கொன்று பல தொழிலாளரைப் படுகாயப்படுத்திவிட்டு, தொழிற்சங்கவாதிகள் மீது கலக வழக்கு போலீஸ் தொடுத்திருந்தது. 27–9–58-ல் இவ்வழக்கில் பிரபல தொழிற்சங்க தலைவர்கள் ஏ.எஸ். கே. அய்யங்கார், அந்தோணிப்பிள்ளையையும் சேர்த்துள்ளனர்.

## அக்டோபர் 1-ல் இந்தியா-சீன நட்புறவு தினம் கொண்டாடுக

புதுடில்லி, செப். 29—

சீன மக்கள் குடியரசின் தேசீய தினமாகிய அக்டோபர் 1ந் தேதியை இந்தியா-சீன நட்புறவு தினமாகக் கொண்டாடும்படி இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் செயற்குழு வேண்டுகோள் விடுத்துள்ளது.

கம்யூனிஸ்ட் கட்சியின் எல்லா உறுப்பினர்களும், யூனிட்டுகளும் அக். 1-ல் இந்த விழாவை மகத்தான முறையில், சீன மக்களுக்கு இந்தியாவின் நேசத்தையும், நட்புறவையும் பிரகடனப்படுத்தும் முறையிலும், அமெரிக்க ஆக்ரமிப்பாளர்களுக்குத் தங்கள் வெஞ்சினத்தைத் தெரிவிக்கும் முறையிலும், சகல தேசபக்த ஸ்தாபனங்களுடனும், சீன நட்புறவு ஸ்தாபனங்களுடனும் சேர்ந்து கொண்டாடும்படி அந்த வேண்டுகோள் [illegible]ணித்துள்ளது.

### அ. இ. தொழிற்சங்க காங்கிரஸ் அறிக்கை

அக்டோபர் 1-ந் தேதியை இந்தியா-சீன நட்புறவு தினமாக, சகல தொழிற்சங்கங்களும், எல்லாக் கட்சிகளும், ஸ்தாபனங்களும் கூட்டுமுறையில் கொண்டாடும்படி அ. இ. தொழிற் சங்கக் காங்கிரசின் (AITUC) செயற்குழுவும் வேண்டுகோள் விடுத்துள்ளது.

## கை ஏர், மாட்டுவார மசோதாவை திருத்துக! இல்லையேல் உள்ள உரிமைகளும் போகும்

### தமிழ்நாடு விவசாய சங்க செயலாளர் சிவகுருநாதம்பிள்ளை அறிக்கை

சென்னை, செப். 29—

இன்றைய சட்டசபையில் விவாதத்துக்கு வரும் கை ஏர், மாட்டு ஏர் வார பாதுகாப்பு மசோதா பற்றி, தமிழ்நாடு விவசாய சங்க உதவி செயலாளர் திரு. சிவகுருநாதம் பிள்ளை அவர்கள் கீழ்வருமாறு எழுதுகிறார்:

"சென்னை சாகுபடியாளர் பாதுகாப்பு திருத்தச் சட்டம் (1956-ம் வருஷத்திய 14-வது சட்டம்) சட்டசபையில் நிறைவேற்றப்பட்டு, ஜனாதிபதியால் அங்கீகரிக்கப்பட்டு அமுல் செய்யப்பட்டபோது, திருச்சிராப்பள்ளி ஜில்லாவில் நிலவிவரும் "மாட்டு வாரம், கை வாரம்" ஆகிய இருவகை சாகுபடியாளர்களுக்கும் அச்சட்டம் பொருந்தும் என்ற நிலைமையிலேயே இருந்தது.

#### உயர் நீதிமன்றத் தீர்ப்பு

ஆனால் சில நிலச்சுவான்தார்களின் ஆட்சேபணை காரணமாக, சென்னை உயர் நீதிமன்ற நீதிபதியின் தீர்ப்புக்கு வந்தபோது, மேற்படி சட்டத்தில், "சாகுபடி செய்யும் குத்தகைதார்" என்னும் பதங்களுக்கு அளிக்கப்பட்டிருக்கும் வியாக்யானம், மேற்படி இரண்டு வாரம்தார்களுக்கும் பொருந்தாது என்றும், ஆகையால் அந்தச் சட்டப்படிக்குள்ள நன்மைகளை அடைய அருகதை உள்ளவர்கள் அல்ல என்றும் தீர்ப்பு அளித்துவிட்டபடியால், அந்தச் சட்டத்திலுள்ள மேற்படி குறையை நீக்கும்பொருட்டு, தனியே ஒரு மசோதா இப்பொழுது கொண்டுவரப்படுகிறது.

#### முதல் அநீதி

முந்தின சட்டத்தில் எவ்வளவு சிறிய நிலச்சுவானாக இருந்தாலும் அவரின்கீழ் சாகுபடி செய்யும் வாரம் குத்தகைதாரர்களின் உரிமைகள் பறிக்கப்பட்டு, அவர்கள் விலக்கப்படாமலே, அவர்களை சட்டப்படிக்குள்ள சாகுபடிதாரர்களாகவே இருக்கிறார்கள். ஆனால் இந்தச் சட்டத்தில் பத்து ஏகருக்கு மேற்பட்ட நிலச்சுவான்தார்களின் கீழ் சாகுபடி செய்பவர்களுக்கே இந்தச் சட்டம் செல்லுபடியாகுமென்று செக்ஷன் 7-ல் விதிக்கப்பட்டிருக்கிறது. இது முதல் அநீதி.

#### இரண்டாவது அநீதி

இந்த மசோதா செக்ஷன் 9 (1-ல்) 3 ஏக்கருக்குள்பட்ட நிலச்சுவான்தார்களின் நிலங்களை எவ்வித காரணமுமின்றி நிபந்தனையுமின்றி, மாட்டுவாரதார்களிடமிருந்து பறித்துக்கொள்ளும் உரிமை அளிக்கப்பட்டிருக்கிறார்கள். அப்படி அபகரிக்கப்படும் நிலம், நிலச்சுவானால் சொந்தச் சாகுபடி செய்யப்பட வேண்டும் என்ற குறைந்தபட்ச நிபந்தனை கூட உடையதல்ல.

செக்ஷன் 9 (2) படிக்கு 10 ஏக்கருக்கு மேற்படாத நிலச்சுவான்கள் தங்கள் சொந்த சாகுபடிக்காக 3 ஏக்கருக்கு மேல்படாத நிலத்தை எவ்வித நிபந்தனையன்னியில் மீட்டுக் கொள்ளலாம். இது இரண்டாவது அநீதி.

#### மூன்றாவது அநீதி

அப்படி மீட்டும்போது, நிலச்சுவான்எந்த நிலத்தை விரும்புகிறாரோ, அந்த நிலத்தை அவர் மீட்டுக் கொள்ளலாம். அதிலும் யாதொரு நிபந்தனையுமில்லை. இது மூன்றாவது அநீதி.

சாகுபடியாளர் பாதுகாப்பு (1956-ம் வருடத்திய 14-வது) சட்டத்தில், இவ்வித நிபந்தனையற்ற சலுகை எந்த நிலச்சுவானுக்கும் அளிக்கப்படவில்லை. அந்தச் சட்டத்தின்படி $13\frac{1}{3}$ ஏக்கருக்குக் குறைவான நிலமுள்ள நிலச்சுவான்களே, 5 ஏக்கருக்கு மேல்பட்ட நிலத்தை சாகுபடிக்கு மீட்டுக்கொள்ளலாம். அப்படி மீட்டுக் கொள்ளுவதில் எந்த விவசாயிடமிருந்தும், அவன் சாகுபடி செய்யும்விஸ்தீரணத்தில் பாதிக்கு மேல்படாத நிலத்தையே மீட்டுக் கொள்ள உரிமையுண்டு.

அப்படி நிலச்சுவான் மீட்க விரும்பும்போது, சாகுபடியாளர்கள் அந்த விகித நிலத்துக்கு 1955 செப். 27-ம் தேதிக்கு முன்பு என்ன குத்தகை நிலச்சுவானுக்கு அளிக்கப்பட்டு வந்ததோ, அதே குத்தகை விகிதத்தை சாகுபடிதார் செலுத்தி வைக்க ஒப்புக்கொண்டால், அந்த நிலத்தை சாகுபடியாளரிடமிருந்து நிலச்சுவான்கள் மீட்க முடியாது. இந்தச் சலுகை புதிய மசோதாவில் பறிக்கப்பட்டு விட்டது.

அடுத்தபடியாக 10 ஏக்கருக்குட்பட்ட நிலச்சுவான் தங்களுக்கு இஷ்டமான 3 ஏக்கர் நிலத்தை சொந்தச் சாகுபடிக்குப் பிரித்துக்கொள்ளலாம் என்றால், தன்னிடம் சாகுபடி செய்யும் ஒன்றுக்கு மேற்பட்ட விவசாயிகளில் எவர் நிலத்தை வேண்டுமானாலும், அந்த விவசாயிக்கு யாதொரு பரிகாரமும் அளிக்காமல், அவருடைய முழுநிலத்தையுமே பிரித்துக்கொண்டு அந்த விவசாயியை அந்தரத்தில் விட்டு விடலாம்.

அல்லாமலும், தன்னிடம் சாகுபடி செய்யும் பல விவசாயிகளிடமிருக்கும் நிலங்களில் முதன்மையாய் உள்ள நாற்றங்கால் போன்ற 3 ஏக்கர் அளவுக்கு பொறுக்கியெடுத்துக் கொண்டு, சாகுபடி செய்யும் விவசாயிகளுக்கு நாற்றுவிட வசதியில்லாமல் செய்து, அவர்களுக்குக் கஷ்டத்தை உண்டுபண்ணி, உற்பத்தியைப் பாதிக்கச்செய்து, சாகுபடியாளர், முடிவில் முழு நிலத்தையும் விட்டுவிட்டு ஓடும் சூழ்நிலைமையையும் சிருஷ்டித்துவிடலாம்.

#### நான்காவது அநீதி

புதிய மசோதா செக்ஷன் 9 (4) படி, இந்தச் சட்டம் அமுலாகும் தேதியில் மாட்டு வாரம் தாருடைய பாத்தியதையை ரத்து செய்ய அதிகாரமில்லாத எந்த நிலச்சுவானும், இந்தச் சட்டம் அமுலுக்கு வந்த பிறகு அவனுடைய சூழ்நிலை மாறுதல்கள் காரணமாக, மாட்டு வாரம்தாருடைய பாத்தியதையை பறிமுதல் செய்யும் அதிகாரம் பெறலாம். இது நான்காவது அநீதி.

இவ்விதமாக மாட்டு வாரம் தார்களுக்கு நன்மை செய்வது போல் பாவனை செய்து, நடைமுறையில் உள்ள உரிமையையும் தட்டிப் பறிக்கிறது இந்த மசோதா.

கை வாரம்தாரைப் பழி வாங்கவும் செக்ஷன் 4 (2) ன் கீழ் இடமளிக்கப்பட்டிருக்கிறது.

செக்ஷன் 2 ல் கை வாரம் தாருக்கு மாதச் சம்பளம் 45 பட்டணம் படி என்பதும், தற்கால வாழ்க்கைச் செலவைக் கவனிக்கும்போது, அரை வயிற்றுக்குக் கூட காணாது. இதனால் வாழ முடியாத நிலைமை ஏற்பட்டு, கை வார முறையையே ரத்து செய்துவிட்டு ஓடவேண்டிய நிலைமை ஏற்படும்.

எனவே, எதிர்க்கட்சியினரும், ஆளும் கட்சியில் விவசாயிகள் பால் அனுதாபமுள்ளவர்களும் தக்க திருத்தங்களைச் செய்து சட்டமாக்க வேண்டுமாய் வேண்டிக் கொள்ளுகிறேன்.

## வானொலி

### சென்னை 1

2—10—58

காலை முதல் ஒலிபரப்பு 319.1 மீ. (940 கி. ஸை.) 7.00 துதிப் பாடல்கள் (கீதையிலிருந்து கவிதா வாசகம்) 7-10 நிகழ்ச்சிக் குறிப்புகள் வானிலை அறிவிப்பு, 7-15 தமிழில் செய்தி, 7.30 தியாகரா[illegible]ன் பஜனை ஸம்பிரதாய க்ரு[illegible]ள் 8–15 ஒலிபரப்பு முடிவு.

இரண்டாவது ஒலிபரப்பு 319.1 மீ. (945 கி. ஸை.) 1-00 மஹிளா மண்டலி 1.30 காந்தீயத்தில் பெண் பேச்சு. (திருச்சி அஞ்சல்) 1-40 ஹிந்தியில் செய்தி,1-50 கீத மாலிகா, 2-00 தமிழில் செய்தி 2-10 வானிலை அறிவிப்பு ஒலி பரப்பு முடிவு

மாலை முன்றாவது ஒலிபரப்பு 319. 1 மீ. (940 கி. ஸை.) 5–30 கே. எம். சுப்ரமண்யம் நாகஸ்வரம் 6-05 பிராந்தியச் செய்திகள் 6–15 காந்திஜி நூல்களிலிருந்து வாசகம் 6-25 கிராம நிகழ்ச்சிகள் (திருச்சியில் உள்ளபடி) 7-15 தமிழில் செய்தி 7-30 மக்களும் அரசியலும் 7–40 இடைவேளை 7.45 ராகம், தானம், பல்லவி 8-30 நேயர் விருப்பம் 9.00 ஹிந்துஸ்தானி வாத்ய இசை 9-30 சென்னை 2-ல் உள்ளபடி 10-30 ஒலிபரப்பு முடிவு.

### திருச்சி

2—10—58

389.6 மீ. (770 கி. ஸை.)

காலை முதல் ஒலிபரப்பு 7-00 வைஷ்ணவ ஜனதோ துதிப் பாடல்கள் 7-10 நிகழ்ச்சிக் குறிப்புகள் 7-15 தமிழில் செய்தி, 7.30 உலகினும் பெரியவனே (காந்திஜிபேரில் பாடல்கள் கொண்ட விசேஷ நிகழ்ச்சி) 8-00 ஆங்கிலத்தில் செய்தி, 8-15 ஒலி பரப்பு முடிவு.

இரண்டாவது ஒலிபரப்பு 1-00 பாபுஜி 1-30 பெண்ணுலகம் 1-40 ஹிந்தியில் செய்தி 1-50 கோமளவல்லி, ஸ்ரீநிவாசன் வயலின் 2-00 தமிழில் செய்தி 2-10 மணிமலர் 2-45 வானிலை அறிவிப்பு ஒலிபரப்பு முடிவு.

மாலை மூன்றாவது ஒலிபரப்பு 5-45 இசைப்பயிற்சி, 6-00 அறிவிப்புகள் 6-05 பிராந்தியச் செய்திகள் 6-15 காந்திஜி நூல்களிலிருந்து வாசகம் (சென்னை 1-ல் உள்ளபடி) 6–25 கிராம நிகழ்ச்சிகள் 7-15 தமிழில் செய்தி 7.30 மக்களும் அரசியலும் (கூட்டுறவு வாழ்க்கை முறை) பேச்சு. 7-40 இம்மாதப் பாடல் 7-45 பஜனை 8–00 எல்லோருக்கும் தாய் சித்திரம் 8-30 டெல்லியில் உள்ளபடி 8–55 இடைவேளை. 9-00 ஆங்கிலத்தில் செய்தி 9.15 துதிப் பாடல்கள் 10.00 ஒலிபரப்பு முடிவு.



## ஜப்பான் புயல் சாவுப் பட்டியல் 340ஆக உயர்வு

டோக்யோ, செப். 29—

சென்ற வெள்ளியன்று ஜப்பானில் ஏற்பட்ட கொடிய புயலால் இறந்தோரின் தொகை 340 ஆக உயர்ந்துவிட்டது. இது தவிர 555 பேர் படுகாயமடைந்திருப்பதோடு 984 பேர் காணப்படவில்லை என்றும் அறிவிக்கப்பட்டது. (ராய்ட்டர்)

ஜனசக்தி பிரஸ்ஸில் அச்சிட்டு வெளியிட்டவர்: எஸ். கிருஷ்ணசாமி ஆசிரியர் ப. ஜீவானந்தம். முகவரி; 32, பிராட்வே சென்னை.1.

Janasakthi, Tamil Daily, 32, Broadway, Madras. 1.